உ

# விவேகானந்தம்

விவேகானந்தரின் உபதேச மணிகள்

யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார்



அன்பு நிலயம்

இராமச்சந்திரபுரம் திருச்சி ஜில்லா

## பதிப்புரை

நமது பாரத நாட்டின் ஞானச்சுடர்மணி, விவேகானந்தர்; முப்பதுவயதில், அமெரிக்காவிலும், இங்கிலாந்திலும் வேதாந்த முழக்கஞ் செய்து, நமது நாட்டின் ஆத்மசக்தியை உலகிற்கு விளக்கினர். அவருடைய உயர்ந்த கருத்துக்களும், சொற்பொழிவுகளின் ஆவேசக் கனலும், சிந்தனைகளும், உபதேசங்களும், தூய துறவின் வளமும், "விவேகானந்தம்" என்னும் இந்நூலில் அடங்கியுள்ளன.

'விவேகானந்த - உணர்ச்சி' தமிழர் நரம்பிலும் ஏறும்படி விறுவிறுப்பாகப் படிக்கவே இந்நூல் யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் அவர்களால் சுவை ததும்பச் சுருக்கவிளக்கமாக எழுதப்பெற்றது, இதனை மேடையில் நாடகமாக ஆட விரும்புவோர். ஆங்காங்கே சம்பாஷணைகளைச் சுருக்கி நடித்தின்புறலாம். உணர்ச்சி ததும்பச் சொற்பொழிவாற்றப் பழகுவோருக்கு, இந்நூல் பெரும் பயனகும்.

வாழ்க விவேகானந்தர்!

இராமச்சந்திரபுரம்
15—10—'43

அன்பு நிலயத்தார்

எக—க—தூ

## பொருளடக்கம்

# விவேகானந்தம்

---

## நாடக பாத்திரங்கள்

விவேகானந்தர்
பிரம்மானந்தர்
பிரேமானந்தர்
இராமகிருஷ்ணனந்தர்
நிரஞ்சனனந்தர்
அபேதானந்தர்
சிவானந்தர் முதலிய சீடர்கள்
சாரதா தேவி
பரமஹம்ஸரின் ஒளிவடிவு
பாரதமாதா
பாஸ்கர சேதுபதி
ஜகன் மோஹன்லால்
திவான்
அழகிய சிங்கப்பெருமாள்
சிங்காரவேலு
சேவகன்
மிஸஸ். ஜார்ஜ் ஹேல்
டாக்டர் பாரோஸ்
சக்ரவர்த்தி
சர்வமத சங்கப் பிரதிநிதிகள்
குட்வின்
மிஸ்டர் ஸேவியர்
மிஸஸ். ஸேவியர்

---

# விவேகானந்தம்



## 1. சீடரின் கடுந்தவம்

[பரமஹம்ஸர் சமாதிக்கருகே (பாரநாகூரில், ஒரு சிறு வீடமர்த்திக்கொண்டு அனைத்தையுந் துறந்து, விவேகானந்தரின் தலைமையில் பிரம்மானந்தர் (ராகால்), நிரஞ்சனானந்தர், சாரதானந்தர், இராமகிருஷ்ணனந்தர் (சசி), அத்புதானந்தர் (லட்டு), அத்வைதானந்தர் (கோபால்), சிவானந்தர் (தாரக்), அபேதானந்தர் (காளி) முதலியோர் கடுந்தவ வாழ்வு வாழுகின்றனர்; வந்ததை யுண்டு சிந்தையற்று வேதாந்த விசாரம், பல மத ஆராய்ச்சி, பஜனை, பக்தி, தியானம், கற்றல், கேட்டல், வந்தவர்களுக்குக் குருதேவர் பெருமையையும் உபதேசங்களையும் எடுத்துரைத்தல்—இப்படியாக நாட்களைக் கழித்துவந்தனர். ஸுரேஷ் (ஸுரேந்த்ரர்) என்னும் அன்பர், தாராளமாகத் தேவையறிந்து அவர்களுக்குத் துணை செய்து வந்தார். அவராலேதான் **பாரநாகூர் மடம்** இன்று **பேலூர் மடமாகப்** பெருமைபெற் றோங்குகிறது! அவ்வாறே, ராம், பாலராம், மஹேந்திரர், கிரீஷ் முதலிய இல்லற அன்பர்கள் அடிக்கடி வந்து ஸத்ஸங்கத்திற் கலந்து கொள்வர்; முடிந்த மட்டும் துணைபுரிவர். துறவிகள் ஒரு காவித் துண்டும், கோவணமும் அணிந்தனர். வெளியே செல்வோர் உடுக்க ஒரு காவி

வேஷ்டியும் அங்கவஸ்திரமும் வைத்திருந்தனர். பிச்சையால் வந்ததை யுண்டனர். கீரையும் சோறும் அவர்களுக்குப் போதியன ; சிந்தையை ஆன்மவளர்ச்சியிலும், குருசேவையிலும் வைத்தனர் ; இரவில் தூனி நெருப்பு (Campfire) பற்ற விட்டு, சுற்றியுட்கார்ந்து தியானிப்பர், பாடுவர், குருவின் பெருமையைப் பேசுவர். அந்த்பூர் (Antpur) என்ற கிராமத்திற்கு, பிரேமானந்தர் தாயார் அழைப்பிற் கிணங்கி, இந்த ஸாது சங்கம் சென்றது. அங்கேயே இராமகிருஷ்ண சந்யாசிகள் கிறிஸ்துவைப்போலத் தூய அருட்பணி வாழ்வு வாழ உறுதி பூண்டனர். இராமகிருஷ்ணனந்தர் தாய்போல உணவுத் தொண்டு செய்து வந்தார். பாரநாகூரில் பரமஹம்ஸர் படத்தின்முன் அவருடைய எலும்புகளடங்கிய குடம் ஒன்றுள்ளது. அதன்முன் அன்பர்கள் வீற்றிருந்து பரவசத்துடன் பஜனை செய்கின்றனர்.]

எல்லாரும் : (பாடுதல்)

இராகம் : காபி] [தாளம் : ஆதி

சுத்த சச்சி தானந்தச்
சுயம்ப்ர காச ஜோதி ஓம்,
சத்தியஸ்வ ரூபஓம்ஸத்—குருநாதா ! (சுத்த)

பக்தி ஞான, கர்ம யோகப்
பாதை செல்லும் சாதகர்,
சித்திசேரச் சக்தி நல்கும்—உமைநாதா ! (சுத்த)

சித்த மின்னும் வட்ட மிட்டுச்
சீரழித்தி டாமலுன்
பத்ம பாதம் பற்றி நிற்கும்—பதமீவாய் ; (சுத்த)

இத்த லத்துன் யோக லீலை
எங்கு மின்பந் தூண்டியே
நித்த நித்த மோங்கவருள்—பெருமானே ! (சுத்த)

* விவேகானந்தர் : குருமகராஜ்கீ ஜே ! நம்மீது தாயினும் அன்பு பூண்ட தயாபரனுன குருநாதனுக்கு நாம் செய்யும் கைம்மாறென்ன ? தூய துறவு ஆத்ம பரிபூரணம், தியானம், சாதனம், அவருடைய திருவாழ்வையும் உபதேசங்களையும் பயின்று உலகிற் பரப்புதல்—இவையே! பரமஹம்ஸச் சேய்களே, குருநாதர் உருமறைந்து அருவாக என்றும் நம்மிடையே உள்ளார் ! புத்தர், ஏசுநாதர், முகம்மதுநபி, சைதன்யர், சங்கரர் ஆகிய மகான்களின் பெருமையெல்லாம் உருவெடுத்த நம் குருதேவரின் அருட் பணிக்கு நம்மை அணுவணுவாகப் பூரணப்படுத்துவோம் ; கடவுளைக் காண நாகமஹாசயர் போன்று ஆர்வமுறுவோம் ; நாம் அத்வைத சித்திபெற வேண்டும்.

எல்லாரும் : ஆம் : "ப்ரஹ்மஸத்யம் ஜகன் மித்யா ஜீவப்ரஹ் மைவ நாபர:"

விவே : இன்று சிவராத்திரி ; துறவிகட்கிறைவனுன சிவனை வழுத்துங்கள் !

---

* "விவேகானந்தர்" எனும் பெயர் நரேன் அமெரிக்காவிற்குப் புறப்படுகையில் க்ஷேத்ரி மகாராஜாவினுல் கொடுக்கப்பட்டது. அஃது உலகறிந்த பெயராதலின் அதையே இங்கு வழங்குகிறேம்.

பிரம்மானந்தர்: தினம் உண்ணும் கீரையும் சோறுங்கூட இன்று இல்லை. வயிற்றை மறந்து பிரம்மானந்தமாக மனத்தைச் சிவபக்தியில் செலுத்துவோம்.

விவே: ஸத்குருமகராஜ்கீ ஜே!

எல்லாரும்: (நாமாவளி பாடுதல்)

ஜயசிவ ஓங்கார, பஜசிவ ஓங்கார,
ப்ரம்மாவிஷ்ணு ஸதாசிவ, ஹரஹர, சிவமஹாதேவ்!
சம்போ கங்காதரா, கௌரீ மனோஹரா!
சாம்பசிவசிவ, சம்போ மஹாதேவ!

விவே: சிவசக்தி ஸ்வரூபியான குருதேவரைப் பாடுவோம்!

சாரதானந்தருடன் எல்லாரும் } (பாடுதல்)

ஹ்ருதய கமல மத்யே
ராஜிதம், நிர்வி கல்பம்,
ஸதஸ தகில பேதா
தீதம், ஏகஸ்வ ரூபம்,
ப்ரக்ருதி வ்க்ருதி ஸூன்யம்,
நித்ய மானந்த மூர்த்திம்
விமல பரம ஹம்ஸம்
ராம க்ருஷ்ணம் பஜாம:

ஜயராமக்ருஷ்ண ஹரிபோல்!

ஜயராமக்ருஷ்ண குருபோல்! [பாடிப் பரவசமாக ஆடுகின்றனர். இராமகிருஷ்ணனந்தர் வருகிறார்.]

இராம : ஸ்வாமிஜீ, ஊணுறக்கம் வேண்டவா? சமையலாயிற்று; எல்லாரும் சாப்பிட வாருங்கள்! ஏதோ உள்ளதை உட்கொண்டு, பிறகு வேதாந்த விசாரணை செய்யுங்கள், படியுங்கள், பாடுங்கள், ஆடுங்கள், பக்தியிற் புரளுங்கள்!

பிரம்மா : சசி, தாய்! எப்படிச் சமைத்தாய்? காலையில் ஒரு அரிசிமணி கூட இல்லையே!

இராம : இன்று 11-மணிக்கு அத்வைதானந்த சாமி ஒரு மூட்டை அரிசியும், காய்கறியும் கொண்டு வந்தது. உடனே எல்லாவற்றையும் சேர்த்து ஒரு பொங்கலாகச் செய்து, உப்புப்போட்டு வைத்துள்ளேன். நேற்று குருமகராஜருக்கு நிவேதித்த தேங்காய் மூடியுள்ளது; சாப்பிடுவோம் வாருங்கள்!

விவே : அத்வைதானந்த ஸ்வாமி எங்கிருந்து கொண்டுவந்தது? ஓகோ, நாம் பட்டினியிருப்பதை யறிந்து ஸுரேஷ் பாபு அனுப்பியுள்ளார்!

எல்லாரும் : ஸுரேஷ் பாபுவின் மூலம் பகவான் தம் குழந்தைகளை ஊட்டுகிறார். அவருடைய தாராள சிந்தை வாழ்க! இந்தப் பாரநாகூர் மடம் அவரால் நிலைபெற்றது.

விவே : சரி, உடனே கடனைக் கழிப்போம் வாருங்கள்; இராமகிருஷ்ணனந்தர் நம்மைத் தாய் போலப் பாதுகாக்கிறார். எல்லாம் குருதேவர் செயல்! இன்று சாப்பிட்டவுடன் என் மனத்திலுள்ள ஒரு பெரிய எண்ணத்தை உங்களுக்கு வெளியிடப் போகிறேன்.

இராம: வாருங்கள்; அபேதானந்தசாமி எங்கே?

விவே: அதோ, அந்த அறையில் தியானம் செய்கிறார்; கதவைத் தட்டி எழுப்பி வாருங்கள்!

இராம: சிவானந்த சுவாமி, துரியானந்த சுவாமி முதலியோர் தியானத்தில் உட்கார்ந்தால் அடித்து எழுப்பவேண்டியிருக்கிறது! நீங்கள் செல்லுங்கள்! எல்லோரையும் நான் இழுத்துக்கொண்டு வருகிறேன். அதோ, சில சாமிகள் வயிற்றை மறந்து வேதாந்த விசாரணைகள் செய்கின்றன! இன்னும் ஒரு மணி நேரம் சென்றால் இல்லறச் சீடர்களும், பக்தர்கள் பலரும், அறிவாளிகளும் அமைதியும் ஆத்ம ஞானமும் தேடி இங்கே கூடுவர். பிறகு நாள் போவதே தெரியாது. எல்லோரும் எழுந்திருங்கள் சாப்பாட்டிற்கு! [சென்று எழுப்பி, அபேதானந்தரையும், சிவானந்தரையும் இழுத்து வருகிறார்.]

அபே: சிவோஹம், சிவோஹம், ப்ரஹ்மைவாஹம்!

இராம: எல்லாம் சாப்பாடான பிறகு!

சிவா: சாமி, தியானவுணவு உண்மையுணவு; ஓம் சிவோஹம், சிவோஹம்!

இராம: தூலவுணவும் உண்மையுணவே; உடலை வைத்துத்தான் உயிர் நடமாடவேண்டும், வாருங்கள்!
[இழுத்துச் செல்கின்றார்.]

---

## 2. பரிவ்ராஜகர்

[பிரம்மானந்தர், பிரேமானந்தர், யோகானந்தர், துரியானந்தர் சாரதானந்தர், அகண்டானந்தர், நிரஞ்சனானந்தர், சிவானந்தர், அத்வைதானந்தர், திரிகுணாதீதர், அபேதானந்தர் முதலியோர் முன், விவேகானந்தர் தாம் பரிவ்ராஜகராகப் புறப்படுவது பற்றிப் பேசுகிறார். விவேகானந்தர் ஒரு தடியும் கப்பறையும் பிடித்து நிற்கிறார்.]

எல்லாரும்: குருமகராஜ்கீ ஜே! ஸ்வாமிஜீகீ ஜே!

விவே: துறவுத் துணைவரீர், குருவின் உண்மைப் புதல்வரீர், நமது தீரத் துறவு, காற்றைப் போன்று சிலகாலம் பற்றற்றுலாவுக! இந்த மடத்தின் பற்றும் வேண்டோம்; விண்ணளாவும் மண்ணெலாம் நமது திருமடம்; எங்கும் உலாவுவோம்; வந்ததை யுண்போம்; சிந்தையை ஆத்மத்யானத்தில் நாட்டுவோம். இந்தப் புண்ணியபூமி முழுதையும் வலம் வந்து, நாம் படித்தறிந்ததைப் பார்த்தறிந்து, குருதேவரின் அருட் பணிக்குப் பூரணம் பெறுவோம்! இதுகாறும் சில மாதங்கள் அடிக்கடி யாத்திரை சென்று வந்தோம்! இனி நான் நீண்டகாலம், முனைமுதல் மலைவரையில் (From Cape to Mount), எனது உடற் கவலையை குருதேவனிடம் விட்டுவிட்டு, ஆத்மாவே வழித்துணையாய், நமது புண்ணிய பூமியில் உலாவித்திரிய உறுதி பூண்டுள்ளேன்.

எல்லாரும்: சுவாமிஜீ, நாங்களும் கூட வர லாகாதா?

விவே: ஆன்மா தனி; நானும் தனித்து ஆத்மானந்தத்தில் சில ஆண்டுகள் உலாவுவேன்: இஃது ஆண்டவன் அழைப்பு. நீங்களும் மனம்போல வெவ்வேறிடங்களுக்குச் சென்று வாருங்கள்; மதுகரி பிச்சை யுண்ணுங்கள்! புத்தர், சங்கரர் ஏசு நாதர் போன்று நித்யானந்தராக உலாவுவோம்.

எல்லாரும்: சுவாமிஜீ, எங்களுக்குத் தீவிர மான உபதேசம் ஒன்று செய்தருளவேண்டும்; துறவு நெறியைப்பற்றி வீரவுரை யருளுக!

விவே: துறவு, அரிது, பெரிது: சங்கல்பத்தை யும், சம்ஸ்காரங்களையும், நாளைக் கவலையையும், விருப்பு வெறுப்புகளையும் துறவியே விட்டொழி; எங் கும் பிரமங் காண்; 'ஆத்மா நான்' என்றறிந்து உள்ளே ஊன்று; எங்கே சென்றாலும் உள்ளே உறுதி பெறு; சுத்த மனத்தில் ஊறும் ஞான கங்கையைப் பானம் பண்ணு; பொன்னும், பொரு ளும், ஆசை யகந்தையும் தொடாது மனத்தை மாசறுத்து, சுத்த சுதந்தரானந்தச் சுடர் வெளியில் உலாவு; கட்டுகளை வெட்டு! இன்ப துன்பம், பொன் மண் பெண், நலந்தீது ஆகிய தொந்தக் கட்டு களை அறுத்தெறி! இரும்புச் சங்கிலி, தங்கச் சங்கிலி - இரண்டும் தளைகளே; அறுத் தெறி! ஆசையை யடக்கித் தன்னை யாள்பவனே தீரன். தன்னை வென்றோன் உலகை வெல்வான். விதைத் தோன் விளைப்பான். இருவினை விதையையும் சுதந்தர

மனத்தில் சங்கற்பத்தால் ஊன்றுதே! துறவியே, குண தொந்தங் கடந்த சுயேச்சையான ஆன்மா நீ என்றறி; 'ஓம் தத்ஸத் ஓம்' என்று கர்ஜி; ஆண் பெண் விகாரம் அகற்று; 'ஆண் பெண்ணற்ற ஆத்மா, நான்' என உறுதிகொள்! உள்ளது ஆன்மா. தனக்குத் தானே உறவு. பிற கட்டுகளை உதறுக! ஆன்மா ஒன்றே உள்ளது; அது நாமரூப மற்றது. மாயை, ஆன்மாவில் கற்பனை: அதுவே நாமரூபங்களைத் தோற்றுவிக்கிறது; மனமாயையான வெறுமையிற் சிக்கி, உனக்கு நீயே விலங்கைப் பூட்டிக் கொள்ளாதே! உன்னுள் ஆழ்ந்து உன் உண்மையான ஆன்மாவைத் தேடு; நூலிலும், கோயிலிலும் தேடி வீணாகாதே! அவா, அச்சம், இகம், பரம், மோட்ச விருப்பம், போக விழைவு, தேகாபிமானம், காமக்ரோத லோபமோகச் சங்கிலிகளை உதறித் தள்ளு; உடலை அதன் வினைக்கு விட்டுவிடு! இசை வசையைப் பாராட்டாதே; உன்னதென்று எதையும் வைத்துக்கொள்ளாதே! உனக்கென வீடு வேண்டா, மனைச்சிறை வேண்டா; வான்கூரை தாங்கிய உலக வீட்டில் வேதாந்த கேசரியாக உலாவு; சுதந்தரமாக அலைபுரண்டோடும் தெள்ளிய ஜீவகங்கை போன்று உன் வாழ்வு இயங்கட்டும்! துறவியே, உன்னைப் பிறர் இகழ்ந்தாலும், புகழ்ந்தாலும், பாராட்டாதே! ஞானனந்தம் பெறு; பிறர்க்கு ஞான உணவளி; அறிவுச்சுடரை எங்கும் ஏற்றி, மடமை யிருளை விலக்கு! இப்படி வினையுள்ளமட்டும் உடல் கொண்டுலாவு; 'நீ நான்; நான் அவன்; நான் நான்' என்னும் உண்மையறி! (அஹம் ப்ரஹ்மாஸ்மி ஓம் தத்ஸத்). துறவுத் துணைவரீர், இனிச் செல்வோம்!

எல்லாரும் : (பாடுதல்)

ஸ்ரீ ராகம்] [சாப்பு தாளம்

பல்லவி

சுத்த சுதந்தரனே-ஸத்குருநாதா
ஜோதி ப்ரம்மானந்தனே ! (சுத்த)

அநுபல்லவி

நித்திய சாந்த சக்தி-நெருப்பினை மூட்டினேம் ;
நீறுபடப் பாசத்தை வேருடன் வாட்டினேம் (சுத்த)

சரணம்

மனமாயைக் குலத்தினைக் கனவென வெறுத்தனம் ;
மாசறு துறவறந் தேசுறத் தரித்தனம் ;
உனதன்பு நேயத்தால் எனதென்ப தற்றனம் ;
ஓம் தத்ஸத் ஓமெனும் உண்மையைக் கற்றனம்
(சுத்த)

விவே : இனிப் பிரிவோம். ப்ரம்மைவாஹம், தத்வமஸி ; ப்ரம்மைவாஹம், ஓம் தத்ஸத்.

[எல்லாரும் செல்லல்.]

---

## 3. கன்னியாகுமரியில் தியானம் (1892)

[சுவாமிஜி, கையில் திருவோடும் தடியும் ஏந்தி பரிவ்ராஜகராக பாரதநாடு முழுவதும் சுற்றி, முடிவில் கன்னியாகுமரி முனையில், இந்து சமுத்திரத்தை நோக்கித் தன்னுள் ஆழ்ந்து, மேனாட்டிற் சென்று வேதாந்த மதத்தைப் பரப்ப யோசனை செய்கிறார் :]

### தியானக் காட்சி

சுற்றுந்துறவி, நடக்கும் தரை நூல்; அவன் அனுபவக் களஞ்சியம்! இதோ, கன்னியாகுமரி அருகே காண்கிறது! குருதேவா, என் பரிவ்ராஜக விரதம் முடிந்தது. எத்தனைக் காட்சிப் படலங்கள் முன்னிற்கின்றன! எத்தனை அறிஞர் நட்புறவு! "நாராயண ஹரி' யென்று இந்தத் திருவோட்டை யேந்தி, வந்ததை யுண்டு, எதற்கும் அச்சமின்றி உலவியது எது? குருநாதன் என்னுள் வைத்த துறவுக் கனலன்றோ!

புத்தரும் சங்கரரும் ஞானேபதேசஞ் செய்த காசியில் மகாயோகியான த்ரைலிங்க பரமஹம்ஸரைச் சந்தித்ததும், சாரநாதில், புத்தர் தமது 'தருமசக்ர ப்ரவர்த்தன ஸூத்ர' த்தை உபதேசித்த இடத்தில் வைராக்யமுடன் அமர்ந்ததும், அயோத்தியில் இராமாயணத்தைப் பற்றிச் சிந்தித்ததும், லக்னோவில் நவாபுகளின் அரண்மனைகளைக் கண்டதும், ஆக்ராவில் அற்புத சிற்பச் செல்வமான தாஜ்மகாலைப் பார்த்து வியந்ததும், பிருந்தாவனத்திற் கருகே ஒரு

பங்கியிடம் உக்கா ஏற்றிக் குடித்து ஜாதி ஸம்ஸ்கா ரத்தை உடைத்ததும், பிருந்தாவனத்தில் இராதா கிருஷ்ண பக்தி பரவசமானதும், கோவர்த்தனகிரியில் பசியால் களைத்த எனக்கு ஆண்டவன் கருணை அமுது கொணர்ந்ததும் எண்ண எண்ண இன்பந்தருகின் றன! அப்போது ஒரு கோவணந்தான் அணிந்திருந் தேன்; இராதா குண்டத்தில் அதைக் கசக்கி உலர்த்தி விட்டு ஸ்நானம் செய்தேன்; ஒரு குரங்கு அதை எடுத் தோடிப்போயிற்று. நானும் மனிதர் கண்களிற் பட வேண்டாவென்று வைராக்யத்துடன் நடுக்காட் டிற்கு ஓடினேன்; என் பின்னே ஓடிவந்து ஒருவர் புதிய காவியுடையும் உணவும் தந்தது வியப்பு! எல்லாம் குருநாதன் அருள்!

பிறகு, பத்ரி நாராயண யாத்திரை; வழியில் ஹத்ரஸ் ஸ்டேஷனில் அன்பர் சரத்சந்த்ர குப்தா என்னை உபசரித்து, ஞானம்பெற்று உடனே துறவி யாகிப் பின் தொடர்ந்தார்; ஹ்ருஷீகேசத்தில் நூற் றுக்கணக்கான துறவிகளுடன் இன்புற்றேன். பிறகு, பாரநாகூர் மடத்திற்குத் திரும்பி, எனது துறவுத் துணைவருடன் கூடினேன்; அறிவும் அன்பும் பணிவும் துறவும் தூய்மையும் உருவான மகாபுருஷன் பவாரி பாபாவை, காஃஜிபூரில் தரிசித்து, சர்வமத சம்மதமான அவருடைய அரிய உபதேசங்களைக் கேட்டு இன்புற்றேன்! பகல்பூரில் மதுரநாத் மித்திரர் உபசரித்து, வேதாந்தங் கேட்டார்; அகண்டானந்த ருடன் மீண்டும் அயோத்தி சென்று ஜானகீ சரணர் என்னும் மஹந்துவைக் கண்டேன்; பிறகு கம்பீர மான ஹிமாலயத்தில் உலவினேன். நானிடாவி

னின்று பத்ரிகாச்ரமம் சென்று அங்கு ஓர் ஆலமரத் தடியில் நெடுநேரம் தியானம் செய்கையில், பிரம் மாண்டத்திற்கும் (macrocosm) பிண்டாண்டத்திற்கும் (microcosm) உள்ள ஒற்றுமை விளங்கியது. அல்மோரா விற்குச் சமீபத்தில் இஸ்லாமியரொருவர் தந்த வெள் ளரிக்காயுண்டு பசி தணிந்தது; அல்மோராவில் லாலா பத்ரி ஸஹாவின் நினைப்பு வந்தது. ஸ்ரீநகரில் சாத னஞ் செய்து டேராடூன், ராஜ்பூர், ஹரித்வாரம், ஹ்ரிஷீகேசம், மீரட், தில்லி முதலிய இடங்களைச் சுற்றிக் கொண்டு, இராஜபுதனத்தில் அணி சிறந்த ஆழ்வார் சமஸ்தானத்திற்கு வந்தேன்; அங்கு அன் பர்கள் மத விஷயமாகப் பல சொற்பொழிவுகள் கேட்டனர். ஆழ்வார் மகாராஜா மங்கள சிங்கருக்கு, விக்ரஹ ஆராதனையில் நம்பிக்கை வந்தது. அவர் படத்தில் எச்சில் துப்ப அஞ்சிய சேவகர், அவரைப் போன்றே படத்தை மதித்ததால், "அன்பன் கடவு ளைப் போன்று சிலையையும் மதிக்கிறான்; 'கல்லே கட் டையே, உனக்கு வணக்கம்' என்று சொல்வதில்லை: 'கடவுளே வணக்கம்' என்றுதான் சொல்லுகிறோம்; தெய்வம் எங்கும் உள்ளது" என்று நிரூபிக்கவே, மங்களசிங்க மகாராஜாவிற்கு உடனே நம்பிக்கை பிறந்தது. ஜயபூரில் பாணினியின் அஷ்டாத்யாயியை மூன்றுமனி நேரத்தில் கற்றறிய முடிந்தது. செல்வத் திருவிளங்கும் அபூமலையில் க்ஷேத்ரி மன்னரின் நட்புக் கிடைத்தது; க்ஷேத்ரி மன்னர், உண்மையன்புள்ள சீடரானார். அங்கு, பண்டித நாராயண தாஸரிடம் மஹாபாஷ்யம் கற்றேன். லிம்பிடியில் (குஜராத்) பிரம்ம சரியம் மாசுறுது தப்பியதும், அவ்வூர் மன்னர் அன்பு செய்ததும் ஜுனகாடில் கிறிஸ்துவின் பெரு

மையைப் பற்றிப் பேசியதும், கிர்னர் மலையினின்று பாரததேச மெல்லாம் கோயிலாகக் கண்டதும், பூஜ் மன்னர் நட்பும், கண்ணன் யாதவருடன் இருந்து மறைந்த வெர்வாலில் அஹல்யா பாயால் கட்டப் பட்ட சோமநாதர் ஆலயத்தைக் கண்டதும், போர் பந்தர் அரண்மனையில் ஒன்பது மாதம் ஆரியப்பயிற்சி செய்து வேதம் ஆராய்ந்ததும், மேனாடு செல்ல ஆர்வ மெழுந்ததும், துவாரகை சாரதா மடத்தில் பாரத ஜோதி கண்டதும், பலிதானம் ஸத்ருஞ்ஜய மலையி லிருந்ததும், காண்ட்வாவினின்று பம்பாய் வந்ததும், பூனாவில் பாலகங்காதர திலகரால் உபசரிக்கப் பெற்று வேத விசாரணை செய்து பத்துநாட்க ளிருந்ததும், பெல்காமில் ஹரிபாத மித்ராவுடனிருந்து, பல அரிய விஷயங்களைப் பற்றிப் பேசியதும், அங்கிருந்து பெங்க ளூர் வந்து சேஷாத்திரி ஐயர், அப்துல்ரஹ்மான் சாஹேப் முதலியவர்களால் உபசரிக்கப் பெற்றதும், மைசூர் மகாராஜாவின் நட்புக் கிடைத்ததும், அவ ருக்கு எனது காரிய நோக்கத்தை எடுத்துரைத்த தும், பிறகு, கொச்சி, திருவாங்கூரில் திவான் சங்க ரையர், சுந்தரராமையர், எஸ். கே. நாயர் முதலியோ ரால் உபசரிக்கப் பெற்று, மதுரை வந்து, அரிய அறி வாளியும் பேரன்பருமான பாஸ்கர சேதுபதி மகா ராஜாவைச் சந்தித்ததும் ஆகிய அனைத்தும் குருநாதா, உன் செயல்!

பாஸ்கர சேதுபதியே என்னை சிகாகோ சர்வமத சங்கத்திற்கு (Parliament of Religions at Chicago) செல்லும்படி ஊக்கியுள்ளார். இதற்கு முன்பும் பல மன்னருடன் அதைப்பற்றிப் பேசியதில்,

அனைவரும் உடனே ஆதரவளித்துப் புறப்படத் தூண்டினர். குருநாதா, என்னுள் ஓர் ஆர்வக்கனல் இதயம் வெடிக்க எழுகின்றது! இராமேஸ்வரமும் பார்த்தாயிற்று; அகண்ட சக்திக் கடலே. உனதுள்ளத்தில் ஒரு வேதாந்தச் சிங்கம் கர்ஜித்து நிற்கிறது! குமரியன்னையே, உன் அருந்தவம் முடிந்ததா? நின்னடியிற் சரண்புகுந்து நின் மதிமுகங் கண்டதும், என் மனத்தில் கடல்போல அலையெழுந் தோங்கும் எண்ணச் சுருள்களை வெளியிடுகிறேன்.

ஏ, பாரதத் தாயே!

[கன்யாகுமரியின் சந்நிதியில் நமஸ்கரித்தல்.]

எழுந்திரு பாரதத் தாயே!, தாயே, தாயே, பாரதீ, உனது புண்ணியக் கோயிலை மலைமுதல் முனை மட்டும் அளந்து புனிதமானேன்! தாயே, உன் உண்மை ஞானம் பருகி உய்ய உலகன்னை பசி தவிக்கிருள். ஞானத்தாயே, தீரரின் அன்னையே, உன் வேதாந்தச் சங்கை மேற்கும் கிழக்கும் அதிர்ந்தொலிக்க முழங்கு; இன்பம், வீரத்துணிவு, விடுதலை, அமைதி பொங்கப் புத்தழகுடன் புன்னகைபுரிந்து எழுந்திரு! தேவீ, உன் சக்தி எல்லையற்றது; வற்ருக் கடல். தெய்விக ரிஷிகளின் அத்யாத்மத் தாயே, உன்னிடமே பேரின்ப மருந்துள்ளது! கனவொழிந்தது, காலை புலர்ந்தது, கண்மலர் திறந்தெழு தாயே! ஸநாதன தருமமே, ஹிந்து மதமே, உனது புனிதவுடலில், காலக் கேட்டால் மக்களின் மறதியால் அழுக்குப் படர்ந்துள்ளது; சாதிக் கொடுமையும், வைதிகச் செருக்கும், மடமையும், வறுமையும், அடிமைத்தனமும், சிறுமையும் உன்னை அரித்துத் தின்கின்றன;

தரித்திர நாராயணர் பசி தவிக்கின்றனர்; ஒடுக்கப் பட்ட ஹரிஜனர் சிறுமைப்படுகின்றனர்; பாலிய மணமும், இளங் கைம்பெண்மையும் நாட்டின் எழிலை உறிஞ்சுகின்றன; தோலும் எலும்புமாய் பாரத மக்கள் தேய்ந்து வருவதைக் காணக்காண இரத்தக் கண்ணீர் பீரிடுகின்றதே! காயும் வயிற்றில் ஞானம் ஏறுமா? பட்டினி தவிக்கையில் பரமார்த்தம் பிடிக் குமா? வறுமை தணிக; நல்ல கல்வி பரவுக! பிறகே ஆத்மஞானம் வேர்ப்பிடிக்கும்.

அருட்பணிக்குத் தொண்டர் படை வேண்டும். தாய்நாட்டின் வறுமை, அடிமை மடமை தீர நான் பணிபுரிவேன். நான் துறவி; பணமில்லை. இருப்பி னும், குருநாதன் அருளால் கருதிய கருமம் நிறை வேற்றுவேன்! ஆருயிர்ப் பணிக்கு ஆயிரக்கணக் கான அன்புத் தொண்டர், தியாகிகள் முன்வர வேண்டும். நாட்டை மலை முதல் முனைவரை அளந் தேன்; மன்னவர் மாளிகையிலும், வறியர் குடிலி லும் வசித்தேன்; என் ஆர்வத்தை மன்னவரிடமும் அறிஞரிடமும் தெளிவாக வெளியிட்டேன். உதட் டுதவியே கிடைத்தது! பணத்திற்கு ஏழை பாரத நாட்டை எதிர்பார்த்துப் பயனில்லை; மேனாடு செல் கின்றேன்; என் முப்பத்து மூன்று கோடி சகோ தரர் சார்பாகப் பேசுகின்றேன்; பணம் சேர்த்துத் தாய்ப்பணி புரிகின்றேன்! என் தெய்வங்கள் வறு மைத் தெய்வங்கள், வருந்துந் தெய்வங்கள், தாழ் வுண்ட தெய்வங்கள்; எல்லாச் சாதி வகுப்புத் தெய்வங்களுக்கும் பணிபுரிய என் மூச்சை அர்ப் பணஞ் செய்கிறேன்! பாரத சமூகத்தின் முன்னேற்

றம் ஆத்ம சாதனத்திலுள்ளது. அதை ஓர் அகண்ட வேதாந்த சமுதாய மாக்கவேண்டும்.

ஆம், கடமை செய்யக் கடல் கடக்கின்றேன்; பாரத தருமம் பாரெலாம் விளங்க, வேத வேதாந்த முழக்கம் செய்கின்றேன்; ஞானக் கிழக்கால் செல்வ மேற்கை வென்று, நிதிக்குவைகொண்டு வருகிறேன்; என் சகோதரர், இஸ்லாமியவுடலும் வேதாந்த மனமும் பெற்று வளர்க! ஆண்டவன் பணியே ஆருயிர்ப் பணியாம்; ஆண்டவன் ஆருயிர். திருவின் அருளிற் செழித்திடும் மேற்கால் (West) வறுமை நீங்குக ஞான பாரதம்! பாரத தருமம், பாரதபூமி, பாரத ஞானம், பாரத மக்கள், பாரதப் பெரியோர், பாரதப் பெருமை, பாரதச் சிறப்பிற்காக மேனுடு செல்கிறேன்; ஆத்மஞானச் சங்கு முழக்கி, ஆரிய பூமியின் பேரிசை விளக்கி, மேற்கு நாட்டை வெற்றி கொள்கிறேன்! இதுவே என்பணி! ஏ வேதாந்த கேசரியே, வீரமுற்றெழுந்து முழக்கு! கன்னியா குமரியே, நின் தவக்கனலைத் தா! குருநாதா துணை புரி! அன்னையே, அருள் செய்! இராமநாதபுரம் சென்று பாஸ்கர சேதுபதியைக் கண்டு, புதுச்சேரி வழியே சென்னை செல்ல ஆண்டவன் தூண்டு கின்ருன்.

“ Have thou no home ?
 What home can hold thee, friend ?
The sky thy roof ; the grass
 thy bed ; and food,
What chance may bring,
 Well-cooked or ill, judge not.

No food or drink
    can taint that noble self
Which knows Itself.
    The rolling river be
Thou ever, Sanyasin bold ! say—
    " Om tat sat, om ! "
Few only know the truth,
    the rest will hate
And laugh at thee, great one ;
    but pay no heed.
Go thou, the free, from place
    to place, and help
Them out of darkness, Maya's Veil, without
The fear of pain or search
    for pleasure, go
Beyond them both, Sanyasin bold ! say—
    " Om tat sat, om ! "

[போதல்]

---

## 4. அமெரிக்காப் பயணம் (1—5—1893)

[பம்பாயில் விவேகானந்தர் கப்பலேறுகிறார். அழகிய சிங்கப் பெருமாள், சென்னையிலிருந்து பணம் வசூலித்து வந்து நிவேதிக்கிறார். சென்னையிலிருந்து புறப்படுவதாக முதலில் தீர்மானமாயிருந்தது. சுவாமிகளின் ஆசிர்வாதத்தால் க்ஷேத்ரி மகாராஜாவிற்கு ஆண் குழந்தை பிறந்தது! அந்தச் சந்தோஷத்தைக் கொண்டாட இராஜா சுவாமிகளை அழைத்து வரும்படி காரியதரிசி **ஜகன்மோஹன் லாலை** அனுப்பினார். சுவாமிஜீ சென்னையில் **மன்மதநாத பட்டாசாரியார்** வீட்டில் தங்கியிருந்தார்; அரிய அன்பர்கள் பலர் சென்னையில் சீடராகி, சுவாமிகளை அமெரிக்காவிற்கு அனுப்பப் பெருமுயற்சி செய்தனர். சுவாமிஜீ க்ஷேத்ரி மகாராஜாவின் அழைப்பிற்கிணங்கிச் சென்று, குழந்தையை ஆசிர்வதித்து, பலவாறு உபசரிக்கப்பெற்று பம்பாயில் கப்பலேறுகிறார். எல்லாச் செலவையும் மகாராஜா தாமே ஏற்றுக்கொண்டு, ஜகன்மோஹன் லாலைக் கப்பலேற்றுவதற்கு அனுப்பினார். ஜகன்மோகன் லால் சுவாமிஜீக்கு வேண்டிய உடைகள், சாமான்களெல்லாம் தயாராக்கினார்.]

***[ * சுவாமி விவேகானந்தரும், ஜகன்மோஹன் லாலும் வருதல்]***

---

* "விவேகானந்தர்" என்ற பெயர், சுவாமிஜி அமெரிக்காவிற்குப் புறப்படுமுன் க்ஷேத்ரி மகாராஜாவால் கொடுக்கப்பட்டது. அதற்குமுன் சுவாமிஜி, 'விவிதிசானந்தர்,' 'சச்சிதானந்தர்' என்று பல பெயர்கள் புனைந்துலவினார்.

சுவாமி: குருநாதா, உனது திருவருட்பெருமை செப்புதற் கெளிதோ? காவியும் ஓடும் தடியும் கொண்டு, பரதேசியாகத் திரிந்த எளியேனை மன்னர் பலரும் வணங்கச் செய்தனை! க்ஷேத்ரி மன்னர் சீடரானார்; பல சிறப்புகள் செய்தார். இப்போது அமெரிக்காப் பயணத்திற்கு ஆகும் செலவுகளை யெல்லாம் அவரே ஏற்றுக் கொண்டார். ஆழ்வார், போர்பந்தர், மைசூர், ஹைதராபாத் மன்னர்கள் பலவாறு ஆதரித்தனர். இராமநாதபுரம் பாஸ்கர சேதுபதியோ எனது வாழ்வின் வினையை நன்கறிந்து சர்வமத சங்கம் (Parliament of Religions) செல்லத் தூண்டினார். கன்னியாகுமரியில் உறுதி பூண்டேன். ஆனால், பின்னும் தனியாகச் சுற்றித் திரிந்து புதுச்சேரி வந்தேன்; புதுச்சேரி வாழ்க! அங்கு மன்மத நாதர் என்னைக் கண்டு சென்னைக்கு அழைத்து வந்தார். சென்னையே, என் காரியம் வெற்றிபெற்றால், அதன் பெருமை உனக்கே! சிட்டி (சிங்காரவேலு முதலியார்), அழகியசிங்கப் பெருமாள் போன்ற அரிய அன்பர்கள் அங்குச் சேர்ந்தனர். மேனாடு செல்ல, மன்னரும் அறிஞரும், பலவாறு துணையும் துணிவும் ஈந்தனர் எனினும் குருநாதன் அருளிற்கும் தெய்வத் தாயின் ஆதேசத்திற்கும் காத்திருந்தேன். குருதேவா, எனது கனவில் சோதிவடிவாகத் தோன்றி, நீயே கடலில் நடந்து என்னையும் 'வா' வென்றழைத்தாய்! தாய் சாரதாதேவியின் ஆதேசமும் கிடைத்தது. இதோ, உன் அருட்பணிக்கு, உன் அருட் கருவியாகக் கப்பலேறுகிறேன்! ஓம் நமோ பகவதே ஸ்ரீராமக்ருஷ்ணாய; சிவோஹம், சிவோஹம்!

[சேவகன் பெட்டிகளைச் சுமந்து வருதல்.]

*ஜகன் :* சுவாமிஜீ மகராஜ், தங்களுக்காக "பெனின்சுலர்" (Peninsular) கப்பலில் முதல் வகுப்பு தயாராயிருக்கிறது; இதோ சீட்டு. இப் பெட்டிகளில் உயர்ந்த பட்டாடைகள் உள்ளன.

*சுவாமி :* இவையெல்லாம் எதற்கு? சாதாரண காஷாயம் போதுமே!

*ஜகன் :* தாங்கள் மகாராஜாவின் குரு. அதற் கேற்றபடி செல்லவேண்டும். இதோ, இந்த ஆடையை அணிந்தருள்க! இந்தக் கட்டிடத்திற்குள் செல்ல லாம். [உடைப் பெட்டியைத் தருதல்.]

*சுவாமி :* சரி, தங்கள் விருப்பப்படி நடக்கி றேன்; சிவோஹம்! [சென்று ஆடையணிதல்.]

*ஜகன் :* சேவகா, நீ கப்பலில் பெட்டிகளை ஏற்று!

*சேவகன் :* உத்தரவு எஜமான்.

[செல்கிறான். அழகியசிங்கப்பெருமாள் வருகிறார்.]

*அழ :* சுவாமிஜீ எங்கே?

*ஜகன் :* இப்போது வருவார். என்ன விசேஷம்?

*அழ :* நீங்கள் பாக்யம் செய்தீர்கள்! சென்னையி லிருந்து சுவாமிஜீயைக் கப்பலேற்றப் பெரிய ஏற்பாடுகள் செய்திருந்தோம். சென்னை யன்பர் களின் சார்பாக அவரை உபசரித்தனுப்ப வரும் பேறுயினும் பெற்றேனே!

[சுவாமிஜீ புத்துடை தரித்து வருதல்.]

சுவாமி: அழகியசிங்கம்! சென்னை யன்பர்கள் சுகமா?

அழ: தங்கள் அருளால் அனைவரும் நலமே. [நமஸ்கரிக்கிறார்.]

சுவாமி: சிவோகம், சிவோஹம்! [ஆசீர்வதித்தல்] மன்மதநாத், சிட்டி முதலிய அன்பரிட மிருந்து செய்தி யுண்டா?

அழ: இந்தப் பண முடிப்பை அங்கீகரித் தருள்க! [நமஸ்கரித்துத் தருதல்.]

ஜகன்: நம் சுவாமிஜீ, இப்போது மன்னர் சிங்கம் போலக் காண்கிறார்!

அழ: அதைக் கேட்பானேன்? வேதவேதாந் தச் சிங்கமன்றோ, நம் ஞானச் சுடர் வேந்தர்! சுவாமிஜீ, சென்னை யன்பர் நல்லுரை இவை.

[படித்தல்.]

“சுவாமிகளுக்கு,

சென்னை யன்பர் வணக்கம். சிகாகோ சர்வமத சங்கத்திற்கு, வேதாந்த மதத்தின் தலைவராகத் தாங்களே செல்லத்தகுமென்று சென்னை முழுதும் ஒருமனப்பட்டுத் தங்களை உற்சாகத்துடன் அனுப்புகிறது! தாங்கள் இன்று கப்பலேறுவதை எங்கள் அன்பு விழிகளாற் கண்டு, இன்பக் கண்ணீர் வார்த்து, மனமலர் சொரிந்து, தாங்கள்

புகட்டிய அறிவுச் சுடரால் வணங்குகின்றேம்! க்ஷேத்ரி மகாராஜா, தங்களுக்கு வேண்டிய வெல்லாம் தரும் பேறுபெற்று அழியாப் புகழுடைந்தது இனிது. எனினும், தங்கள் அன்புள்ள சென்னை மகாஜனங்கள், அன்பர் அழகியசிங்கப் பெருமாள் மூலம் இத்துடன் அனுப்பியுள்ள காணிக்கையையும் அங்கீகரித்தருள்க!

வேதாந்த சிங்கமே, தங்கள் கர்ஜனை மேனாட்டை யெழுப்பி, பாரதநாட்டின் கடவுட் பெருமையை விளக்கட்டும்! அமெரிக்க அன்பர்கள் சிலருக்கும் இங்குள்ள பெரியோர்கள் தங்களைப் பற்றிக் கடிதம் எழுதியுள்ளார்கள். தங்கள் அரும்பெருந் திருவினையால் பாரத தருமம் வெற்றியுறுக! நலம், நலம்.

இங்ஙனம்,
தங்களன்பிற் குரிய,

மன்மதநாத், சிங்காரவேலு, வியாசராவ்."

*சுவாமி :* அன்னையின் அன்பும், குருதேவர் அருளும், அன்பர் ஆசியும் அருட்பணியை வெற்றியுறச் செய்க!

*ஜகன் :* குருமகராஜ், கப்பலுக்குச் செல்வோம். [தந்திச் சேவகன் வருகிறன்]

*தந்தி :* சுவாமி, தந்திகள்!

[கொடுத்து வணங்கிச் செல்கிறன்.]

*சுவாமி :* (எல்லாவற்றையும் உடைத்துப் பார்த்தல்.) இது, இராமநாதபுரம் ராஜா பாஸ்கர சேதுபதி! அவர் பேரன்பர்; அவரே என்னை சிகாகோ செல்ல ஊக்கினர்; பேருதவியாளர்: "சுவாமிஜீ, தாங்கள் சிகாகோ புறப்படுவது பேரின்ப மளித்தது! தங்கள் அரிய அருட்பணி வெற்றிபெறுக; வேதாந்த மதம் வேரூன்றி, எங்கும் கிளைபரவி, இன்பக்கனி பழுத்தோங்குக! இன்னும் தங்களுக்குத் தேவையானதை உடனே தெரிவிக்கவும்; அனுப்ப சித்தமா யிருக்கிறேன், அடியேன்" என்று அவர் தந்தி யடித்துள்ளார். ஜகன்மோகன், அவருக்கு எனது நன்றியைத் தெரிவிக்கவும்.

*ஜகன் :* சித்தம்.

*சுவாமி :* இது, மைசூர் மன்னர் அனுப்பியது: "சிகாகோ செல்லும் வேதாந்தச் சிங்கமே, நின் திருவினை வெல்க!" என்கிறார். இது ஹைதராபாத் நவாபு: "ஆண்டவன் அருள் தங்கள் அரும் பணிக்கு வெற்றி சூட்டுக!" என்கிறார். இது போர்பந்தர் மன்னர், இஃது ஆழ்வார்; அவ்வாறே ஆசி கூறுகின்றனர். ஜகன்மோகன், எல்லாருக்கும் நன்றியைத் தெரிவிக்கவும்; எல்லாம் குருநாதன் செயல்! உலகை இன்பத்துறை சேர்க்கும் கப்பல் அவன்! அவன் முன் செல்கிறான்; நான் பின்பற்றுகிறேன்! அழகிய சிங்கம், சென்னை அன்பர்க்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவிக்கவும்!

*அழ :* சுவாமிஜீ, நாங்களே தங்கள் திருவருள் பெற்றதற்கு நன்றி தெரிவிக்க வேண்டும்; சென்னை

யில் குருமகராஜருக்காக ஒரு திருமடம் கட்ட ஏற்பாடு செய்துள்ளோம். தங்களிச்சைப்படியே "ப்ரபுத்த பாரதம்" என்ற மாசிகை ஒன்றை நடத்தவும் விருப்பம். **B. R.** இராஜமையர் என்ற அரிய அறிவாளி அதற்குரிய முயற்சி யெடுத்துக்கொண்டிருக்கிறார்.

*சுவாமி :* சென்னை செய்த உதவி என்றும் நினைவி லிருக்கும். தமிழர் அன்புவடிவு! சென்னை, குருதேவரின் அருள் நிலையமாகுக! சென்னையில் இராமகிருஷ்ண மடம் ஏற்பட்டு, மிகவும் அரியவேலை செய்யுமென்பது உறுதி.

*அழ :* எல்லாம் தங்கள் ஆசி.

[கப்பலில் மணி யடித்தல்.]

*ஜகன் :* குரும்கராஜ், கப்பல் தயார். சாமான்களை முதல் வகுப்பில் வைத்தாயிற்று. அரிய நண்பரும் அங்குள்ளனர். மேனாட்டில் சுவாமிஜீ மிகவும் கவனமா யிருக்க வேண்டும். அஃது உலகாயதர் அரசாட்சி!

*சுவாமி :* எல்லாம் அவனருள் அங்கங்கிருந்து நடத்தும்.

*உருவாய் வந்தெனை உய்வித் தாண்டாய்,*
*அருவாய் நின்றும் ஆங்காங் கருளினை,*
*அன்புக் கடலே, அடியார் துணையே!*
*இன்ப நிறைவே, இராம கிருஷ்ணனே,*
*திருவே ஞானச் செஞ்சுடர்க் குன்றே*
*குருவே, யென்னைக் கொடுத்தனன் உனக்கே!*
*அன்னையின் ஆசி புன்னகை புரிந்தது!*

மன்னர் சகையும், மாண்புள நேயரின்
பன்னருந் துணையும், பரிவும் ஊக்கவே,
உள்ளக் கனலில் உன்னுருத் தோன்றி
வெள்ளங் கடந்து மேனு டேகி,
வேதாந் தத்தை விறுடன் முழக்க
விரும்பிச் செல்கிறேன், வெற்றி யருளாய்!
முன்செல் கின்றனே, என்குரு நாதா!
பின்செல் கின்றனன், பிள்ளையை நடத்தாய்!
சிவோஹம், சக்தி ஓம்! தேவி சாரதா,
அன்னையே வணக்கம் அருங்கலை வாணியே,
என்வாக் கினிலே இருந்தருள்! சிவோஹம்.

Verily, from the Land of Renunciation, I go to the Land of Enjoyment of the world! From India I go, to hail the Spiritual Queen before the world's nations! An *Islamic Body* with a *Vedantic Heart* is my hope for India. Farewell, Om tat sat Om!

[எல்லாரும் செல்லல்.]

---

## 5. அங்கும் தெய்வச் செயல்!

[கொழும்பு, சிங்கப்பூர், ஹாங்காங், ஷாங்கை, கான்டன், நாகசாகி, யோகஹாமா, முதலிய துறைமுகங்களில் இறங்கி, சீனர், ஜப்பானியர் வாழ்வை நன்கு ஆராய்ந்து, வான்கூவர் (Vancouver) சேர்ந்து, கானடா (Canada) வழியே சுவாமிஜீ சிகாகோ (Chicago) (14-7-1893-ல்) எய்தினர்; முதலில் அங்கு ஒரு சிறந்த ஹோட்டலில் தங்கினர்; உலகச் சந்தையின் (World fair) வியன் காட்சிகளைச் சுற்றிப்பார்த்தார். சிகாகோ வாழ்வு செலவு மிகுந்தது; கையிருப்பும் அதிகமில்லை. "சர்வமத சங்கம் செப்டம்பர் முதல் வாரம் கூடும்; அதற்குரிய பிரதிநிதிகள் ஏற்கெனவே தேர்ந்தெடுக்கப்பட்டனர்; இனி இடமில்லை" என்று சொல்லக்கேட்டு வருந்தினர்; எனினும், தெய்வத் திருவருளை நம்பியிருந்தார்; அதனல் போஸ்டன் (Boston) செல்லத் தீர்மானித்தார். வண்டியில் கிழவி யொருத்தி சுவாமிஜீயின் கம்பீரத் தோற்றத்தைக் கண்டு, நட்புப் பேணி, போஸ்டனில் தன் வீட்டில் அமர்த்தினள். ("Breezy Meadows", Metcalf Mass.) அங்குப் பலர் விநோதமாக சுவாமிஜீயைக் காண வந்தனர். பெண்களின் சிறையை மேற்பார்க்கும் ஒரு மாது, அவரை ஆதரித்து, சிறையைப் பார்வையிடச்சொன்னள்: "இந்தியாவில் சிறை, இங்குச்

சீர்திருத்தச்சாலை!” என்று அதன் அருமையான காட்சியை சுவாமிஜீ நண்பரொருவருக்கு விவரித்தார். ஒரு மாதர் சங்கத்தில் சுவாமிஜீ பேசினர்; பிறகு அறிஞர் பலர் வந்து கண்டனர். ஹார்வார்டு சர்வகலாசாலை கிரீக் ஆசிரியர் ரைட் (J. H. Wright) என்பார், சுவாமிஜீயின் புலமையை வியந்து, சர்வமத சங்கத் தலைவர் டாக்டர் பாரோஸ் என்பவருக்கு (Dr. Barrows) சிபார்சுச் சீட்டும், வழிச்செலவும் உதவினர். தெய்வச் செயல்! சுவாமிஜீ சிகாகோ எய்தினர். ஆனால், பாரோஸின் விலாசம் எழுதியிருந்த சீட்டு தவறி விட்டது; கடல்போன்ற அந்தப் பெரிய பட்டணத்தில் எங்கே தேடுவது? தாம் இப்போது சென்றது ஜெர்மானியர் தெரு.]

சுவாமி: ரைட் (Wright) கொடுத்த விலாசம் தவறிவிட்டதே! கடல் போன்ற பட்டணம்! பாரோஸ் வீட்டை எங்கே தேடுவது? இவர்களைக் கேட்டால் கேலி செய்கின்றனர். ஜெர்மானியர் ஆங்கிலமறியார்! ஏதுமறியா ஏழைத் துறவியை இச் செல்வத் திருநகருக்குக் கொணர்ந்த தெய்வமே, தோன்றாத் துணையே, உன்னையே நம்பினேன்:

கடல்கடந் துற்றேன், உன்றன்
கருணையாற் கடமை செய்யத்
திடமுள துணை நீ, யன்புத்
தெய்வமே! அநாதை யானேன்;
இடமிலேன்; பணமு மில்லேன்;
அறிமுகம் எவரு மில்லேன்;
அடிமலர்க் கடியேன், காத்தல்
அனைத்துமுன் பார மன்றோ!

[எதிர் வீட்டிலுள்ள கதவு திறக்கிறது ; ஜார்ஜ் ஹேல் (Mrs. George W. Hale) என்ற பெண் மணி புன்னகையுடன் வருகிருள்.]

*ஜார்ஜ் ஹேல் :* ஐயா, தாங்கள் சர்வமத சங்கத் திற்கு ஒரு பிரதிநிதியா ?

*சுவாமி :* (மனதுள்) தெய்வ சக்தியே, இங்கும் தோன்ருத் துணைபுரிகின்ருயா ? உனதருள் வாழ்க ! (வெளியே) அன்னையே, பாரத நாட்டினின்று ஹிந்து தருமத்தைப் பற்றிச் சர்வமத சங்கத்தில் எடுத்துரைக்க இங்கு வந்தேன். இந்தியர் என்னை அனுப்பினர் ; சீமை புதிது ; வெகு பாடு பட்டேன். முதலில் சர்வ மத சங்கத்தில், "இனி இடமில்லை" என்றனர். முடி வில் ஆண்டவன்செயல் ரைட் என்பவரின் வாயிலாக, பாரோசுக்கு ஓர் அறிமுகச் சீட்டுத் தந்தது ; அவர் தந்த விலாசத்தை இழந்தேன். ஊர் தெரியவில்லை ; ஆண்டவன் செயல் நடக்கட்டுமென்று இந்த ரஸ்தா வில் அநாதையாகப் படுத்தேன். அன்னையே, தங்கள் வாயிலாகத் தெய்வம் தோன்ருத் துணை புரிந்தது ! வந்தனம்.

*ஜார்ஜ் :* ஐயா, தாங்கள் மிகப் பெரியாராகவும் பேரறிஞராகவும் காண்கிறீர்கள். நானே தங்களை பாரோசுக்கு அறிமுகப்படுத்தி, சர்வமத சங்கத்தில் ஹிந்துமதச் சார்பாகப் பேச ஏற்பாடு செய்கிறேன்; கவலை வேண்டா ! களைத்துப்போயிருக்கிறீர்கள் ; உள்ளே வாருங்கள் ! உணவு கொண்டு, உடன் செல்லலாம் ; தங்கள் வீடுபோலவே இதனை எண்ணுங் கள் !

சுவாமி: அற்புதம், அற்புதம்! தெய்வமே, நினது தோன்ருத் துணை அற்புதமே! குருநாதா, எல்லாம் நின் செயல்!

குருவே சரணம், கோவே சரணம்,
திருவே சரணம், தேவே சரணம்!

[வீட்டிற்குள் செல்லல்]

---

## 6. சிகாகோப் பிரசங்கம்

[சிகாகோ சர்வமத சங்கம் 11-9-1893-ல் காலே 10 மணிக்குக் கூடியுள்ளது. சுமார் 10,000 பேர்கொண்ட மிகப் பெரிய மண்டபம்! மேடை மீது, புத்த மதம், ஜைன மதம், கிறிஸ்துவ மதம், இஸ்லாம், பார்ஸி, தவோ, கொன்பூசி, ஷிண்டோ, பிரம்ம சமாஜம், தியாசபி முதலிய மத சங்கப் பிரதிநிதிகள் உட்கார்ந்திருக்கின்றனர். டாக்டர் பாரோஸ், ஸ்நெல், கார்டினல் ஜிப்பின்ஸ், பிஷப் அர்நெட், ப்ரதாப் சந்த்ர முஜூம்தார், காந்தி, சக்ரவர்த்தி, அனி பெஸன்ட் முதலியோருடன், நாகர்கார் (பிரம்ம சமாஜி) தருமபாலர் (புத்தமத ஸ்தர்) இருவருக்குமிடையே சுவாமிஜீ கம்பீரமாக, காவியுடையும் தலேப்பாகையும் தரித்து வீற்றிருக் கிருர். சக்ரவர்த்தி பிரம்மஞான சபைக்காகப் பேசி யுட்கார்ந்ததும், பாரோஸ், விவேகானந்த ரைப் பேசச் சொல்லுகிருர்.]

*சக்ர:* மகாத்மாக்களால் நடத்தப்படும் பிரம்மஞான சபையின் பெருமை அளவற்றது. அதுவே உலக ஒற்றுமையின் இரகசியத்தைத் தன் னுள்ளடக்கி, சமரசத் தாயாக விளங்குகிறதென்பது எவருக்கும் புலப்படும். கனவான்களே, சீமாட்டி களே, உங்களனைவர்க்கும் வந்தனம்.

[உட்காருகிருர்].

பாரோஸ் : கனவான்களே, சீமாட்டிகளே! இப்போது ஹிந்து மதத்தின் சார்பாக, சுவாமி விவேகானந்தர் பேசுவார்.

விவே : (மனதுள்) வாணியே போற்றி! வாக்கினிற் பேசுவாய்! குருவே, வெற்றித் திருவுறச்செய்வாய்!

[அனல் பொழியும் கம்பீரமான முகத்துடன் சபையை நோக்குகிறார்]

## க. ஆரம்பவுரை

"*அமெரிக்கச் சகோதரிகளே, சகோதரர்களே!

[சபை முழுதும், "ஹியர்! ஹியர்!" (Hear, Hear) என்ற ஆரவாரம்! வேறொருவரும் இப்படி உலகை ஒருகுலமாக மதித்துச் சமரஸந் ததும்பப் பேசவில்லை; ஹிப் ஹிப் ஹுரா! நெடுநேரம் கரகோஷம் செய்தல்]

விவே :-(மனதுள்) ஓம் சக்தி, ஜயவாணி, குருநாதா, எல்லாம் நின் செயல். [கரகோஷம் நின்றதும், வெளிப்படையாய்] உங்களன்பான நல்வரவேற்பை ஏற்க எழுந்திருக்கையில், உரை கடந்த இன்பத்தால் என்னுள்ளம் பூரிக்கிறது. உலகில் மிகப்பழமையான துறவோர் குழுவின் சார்பாக உங்களுக்கு வந்தனம்! சர்வசமயத் தாயின் சார்பாக வந்தனம்! எல்லா வகுப்பு வகைகளையும் சேர்ந்த கோடானுகோடி ஹிந்துக்களின் சார்பாக வந்தனம்!

---

* இந்தப் பிரசங்கத்தின் சுருக்கத்தை யொட்டி, சுவாமிஜீ மேனாட்டினருக்குச் செய்த உபதேசங்களையெல்லாம் சுருக்கிக் கூறுகிறோம்.

கிழக்கு நாடுகளினின்று வந்திருக்கும் பிரதி நிதிகளைக் குறித்து, "தூரதேசங்களினின்று விஜயம் செய்துள்ள இவர்கள், சமரஸக் கொள்கைகளைப் பல நாடுகளிலும் பரப்ப ஏற்றவர்கள்" என்று இம் மேடைமீது பேசியவர்களுக்கு வந்தனம்! 'பிறமத வெறுப்பின்றி சர்வமத சமரஸத்தை உலகிற்கெல்லாம் போதித்த சமயம் எனது' என்று பெருமையுடன் கூறுகிறேன். அகில சமரஸம் மட்டுமன்று; எல்லா மதங்களும் உண்மையென்பதையும் நாங்கள் நம்புகின்றோம். 'விலக்கு, ஒதுக்கம்' என்னும் பேச்சேயில்லாத ஆரிய மொழியைக் கொண்ட சமயம் எனது என்று பெருமையாகச் சொல்லுகிறேன். எல்லா மதங்களிலும், நாடுகளிலும் மதக் கொடுமையால் வருந்தியோருக்கு அபயமளித்த சமுதாயம் எனது என்பதிற் பெருமை கொள்ளுகிறேன். உரோமக் கொடுங்கோல் தமது கோயிலையிடித்துப் பாழாக்கிய ஆண்டிலேயே, தென்னிந்தியாவிற்கு வந்து எங்களை யடைந்த சுத்தமான யூதர்கள் இன்னும் எங்களன்பில் ஓங்குகின்றனர் என்பதைப் பெருமையுடன் எடுத்துரைக்கிறேன். முன்னும், இன்றும் ஜோராஸ்திரியருக்கு இடமளித்து ஆதரித்த மதம் எனது என்பதைப் பெருமையுடன் கூறுகிறேன். சகோதரர்களே, சிறுவயது முதல் நான் அடிக்கடி சொல்லி வந்ததும், கோடிக்கணக்கான மக்கள் பாராயணம் செய்வதுமான தியான ஸ்லோகத்தினின்று சில வரிகளை உங்களுக்கு எடுத்துச் சொல்கிறேன்: "பலவேறு முகங்களில் உற்பத்தியாகும் வெவ்வேறு நதிகள், முடிவில் ஒரே கடலிற் கலக்கின்றன; அதுபோல, அவரவர்க்கு வந்தவாறு கொள்ளும் பல சமய நெறி

கள் வளைந்தும், நேராக நீண்டும் வெவ்வேறாகத் தோன்றினும், இறைவனே, எல்லாம் நின்னையே அடைகின்றன!"

இதுகாறும் நிகழாத பெருஞ் சிறப்புவாய்ந்த இந்த சர்வசமயக் கூட்டமே, கீதையின் அற்புத மான கொள்கையை உலகிற்கு நன்கு விளக்கு கின்றது: "எவர் எவ்வழியே என்னையடையி னும், யான் அவர்களை ஏற்கிறேன். மனிதர் அனைவரும் முடிவில் என்னையே அடையும் பல நெறிகளில் உழல்கின்றனர்." நீண்ட காலமாக இத் திருவுலகை, வகுப்புவாதமும், பிடிவாதமும் அவற் றினின்றிழிந்த பயங்கரமான மதவெறியும் பீடித்து வருகின்றன. அவை உலகில் பலாத்காரமாக மனித ஜாதியைக் குருதி வெள்ளத்தில் தோய்த் தன; நாகரிகங்களை அழித்து, சமுதாயங்களை யெல்லாம் மனங் கலக்கின. இந்தப் பயங்கரப் பேய்களில்லாவிடின், மனித சமூகம் இப்போதிருப் பதைவிட எவ்வளவோ அதிக முன்னேற்ற மடைந் திருக்கும். ஆனல், அவை யொழியக் காலம் வந்து விட்டது! இந்தக் கூட்டத்தை மதித்து இன்று காலை யடித்த மணியே, எழுத்தாலும், வாளாலும் புரியும் மதவெறிக் கொடுமைக்கும், ஐக்கியத்தை நோக்கிச் செல்லும் மனித ஜாதிகளிடையே புகுந்த திய மனஸ்தாபங்களுக்கும் சாவுமணியாகும் என் பதை உறுதியாக நான் நம்புகிறேன்.

உலகில் வேற்றுமைகளின் காரண மென்ன வென்பதற்கு ஒரு சிறு கதை சொல்லுகிறேன்: கிணற்றிலேயே ஒரு தவளை பிறந்து வளர்ந்து வசித் தது; அது கிணற்றிலிருக்கும் பூச்சி புழுக்களை யெல்லாம் உண்டு என்னைப்போலத் தடித்துக்

கொழுத்துப் போயிற்று (சிரிப்பு)! ஒரு நாள் ஒரு கடல் தவளை வந்து, அந்தக் கிணற்றில் விழுந்தது. இரண்டும் சம்பாஷிக்கின்றன:

**கிணற்றுத் தவளை:** நீ எங்கிருந்து வருகிறாய்?

**கடல் தவளை:** நான் கடலினின்று போந்தேன்.

**கிணற்றுத் தவளை:** கடல் எவ்வளவு பெரிது? என் கிணற்றள விருக்குமா?

(என்று கிணற்றின் ஒரு பக்கத்திற்குத் தாவியது.)

**கடல் தவளை:** நண்பனே, உனது சிறு கிணற்றுடன் கடலை யெப்படி ஒப்பிட முடியும்?

**கிணற்றுத் தவளை:** (இன்னும் எட்டத் தாவி) உனது கடல் இவ்வளவு பெரிதாயிருக்குமா?

**கடல் தவளை:** இதென்ன பிதற்றல்? கிணறு கடலுக்கிணையா?

**கிணற்று தவளை:** எப்படி யிருப்பினும், என் கிணற்றினும் பெரிது இவ்வுலகில் எதுவும் இருக்க முடியாது; இந்தப் பயல் பொய் சொல்லுகிறான்? இவனை விரட்டியடி! (கரகோஷம்.)

இதுதான் பெரிய சங்கடம். நான் ஹிந்து; என்னிடத்திலேயே நான் இருந்துகொண்டு அதுவே, கிணறே, உலகெல்லாம் என்று நினைத்துக் கொண்டிருக்கிறேன். கிறிஸ்தவனும் அவ்வாறே உலகமெல்லாம் அவன் கிணறளவென்கிறான். இஸ்லாமி

யன், அவனிடத்திலிருந்து இதுதான் உலகெல்லாம் என்கிறன். நமது சிற்றுலகில் இந்த இடர்க் கட்டைகளை உடைக்கப் பெருமுயற்சி கொண்ட அமெரிக்கர்களான உங்களுக்கு நன்றி செலுத்தக் கடவேன். சீக்கிரம் உங்கள் சீரிய வினை வெற்றி பெற ஆண்டவன் அருளுவானென்று நான் நம்புகிறேன். (கரகோஷம்)

கிறிஸ்தவர்களே, நீங்கள் புறச்சமயத்தாரின் ஆன்மாவைக்காக்க மதப்பிரசாரகர்களை (Missionaries) யனுப்புகிறீர்கள்; அவர்கள் உடலைப் பட்டினியினின்று காக்க ஏன் முயலக்கூடாது? நீங்கள் இந்தியாவெங்கும் சர்ச்சுகள் எழுப்புகிறீர்கள்; ஆனால், கிழக்கு நாட்டாரின் பெருந்தேவை, மதமன்று; அவர்களுக்குப் போதிய சமயவுணர்வுள்ளது. பசி தவிக்கும் கோடானுகோடி இந்தியர்கள் தொண்டை வற்றக் கூவுவது உணவிற்காகவே. பட்டினி தவிக்கும் மக்களுக்குத் தத்துவ போதனை செய்வதும், மதம் புகட்டுவதும் அவர்களை ஏளனஞ் செய்வதாகும்.

நான் பௌத்த சமயியல்லன்; எனினும், பௌத்தனே! சீனமும் ஜப்பானும், இலங்கையும் புத்த பகவானின் உபதேசங்களைப் பின்பற்றுகின்றன; இந்தியாவே புத்தரை அவதாரமாக வணங்குகின்றது. கிறிஸ்து, யூதர்; சாக்யமுனி, ஹிந்து. யூதர் கிறிஸ்துவை மறுத்துச் சிலுவை யிட்டனர்; ஹிந்துக்கள் சாக்ய முனியைக் கடவுளாக வணங்குகின்றனர். ஹிந்து தருமம், **கர்மம்**, ஞானம் என்று இரு பிரிவினது. ஞானபாகம் முதன்மையாகத் துறவிகளால் ஓதப்படுகிறது; அதில் ஜாதி வேற்றுமையில்லை. உயர்வு

தாழ்வின்றி இந்தியாவில் எந்த ஜாதியானும் துறவியாகிச் சமத்துவம் எய்தலாம். மதத்திலும் ஜாதியில்லை. ஜாதி, சமுநாயக் கட்டுப்பாடு. சாக்யமுனி, துறவி ; வேதங்களில் மறைந்திருந்த உண்மைகளை உலகோரனைவருக்கும் பயன்படப் பரப்பியது அவருடைய பரந்த உள்ளமே! முதன்முதலில் மதபோதனையைப் பழக்கத்திற்குக் கொணர்ந்தது அவரே. மதமாற்றத்தையும் முதலில் கையாண்டவர் அவரே. அனைவரிடமும், முதன்மையாக அறியாமையிலும் வறுமையிலும் வருந்துவோரிடமும் இருந்த அற்புதமான கருணையே, அவருடைய பெரும் பெருமை. அந்தணச் சீடர்கள் அவருடைய உபதேசங்களை ஆரியத்தில் மொழிபெயர்க்க விரும்பியபோது, "நான் ஏழைகளுக்காகவே, பொது ஜனங்களுக்காகவே, இருக்கிறேன். பொது ஜனங்களின் பாஷையிலேயே பேசுகிறேன்" என்றார். புத்தமதத்தின் பரந்த உள்ளமும், வேதமதத்தின் அறிவு விரிவுமின்றி ஹிந்து மதம் பிழைக்காது. புத்த மதமும், வேத மதமும் பிரிக்க முடியாதவை. அப்படிப் பிரிந்ததனால் தான் இன்று இந்தியா 33 கோடி ஏழையர் நாடாகி, சென்ற ஆயிரம் ஆண்டுகளாகப் பிறருக்கு அடிமையாயிருக்கிறது. வேத மதத்தின் ஆத்ம ஞானத்தையும், புத்தரின் அற்புதமான ஜீவகாருண்ய சக்தியையும் நாம் ஒன்று சேர்க்க வேண்டும்.

ஹிந்து மதம், ஜாரதுஷ்ட்ர மதம், யூத மதம்-இம்மூன்றும் சரித்திர காலத்திற்கு முற்பட்ட சமயங்கள். யூத மதத்தைத் துரத்தி, கிறிஸ்தவமதம் மேலோங்கியது : பார்ஸிகள் சிலரே ஜாரதுஷ்ட்ர

மதத்தின் பெயரால் இருக்கின்றனர். ஆனால் ஹிந்துக்களின் வேத மதமோ, தன்னை யெதிர்த்து வந்த சமயங்களை நாளடைவில் தன்னுள் ஜீரணித் தோங்குகிறது. மிகவுயர்ந்த அத்யாத்ம வேதாந்த ஞானம் முதல் பலவகைத்தான விக்ரக ஆராதனை, சூன்யவாதம், நாஸ்திகம் வரையில் அனைத்திற்கும் ஹிந்து தருமத்தில் இடமிருக்கிறது. ஹிந்து மதம் வேதச் சுருதியாலானது.

வேதம் எல்லையற்றது; அது ஒரு நூலன்று. பல முனிவர்கள் பலமுறை கண்ட உண்மைகளின் தொகுப்பே வேதம். ஆருயிர்களுக்கும் ஆண்டவனுக்கும், ஒருயிர்க்கும் மற்றோருயிர்க்குமுள்ள அத்யாத்மத் தொடர்புகளைப் பூரணமடைந்த வேத ரிஷிகள் கண்டு பிடித்தனர். அவர்களில் மிகப் பெரியோர் சிலர், பெண்பாலர் என்பதை இந்தச் சபைக்கு மகிழ்வுடன் அறிவிக்கிறேன்! (அற்புதமான சமயம்! கரகோஷம்!)

ஆண்டவன் வரம்பில்லாத ஆற்றலுடையோன்; அவன் ஓயாது படைக்கிறான். படைக்கப்பட்டது மீண்டும் அழிகிறது. அழிவது யாக்கை; 'நான்' என்றுமுள்ளவன். 'நான்' ஆத்மா. வாளும் தீயும் நீரும் காற்றும் அதை அழிக்க முடியாது. ஆத்மா உள்ளத்தில் நிலையாயுள்ளது. அது உடலுக்குடல் வினைப்பயனால் மாறினும், உடலிற் கட்டுப்பட்டதன்று; அது என்றும் சுதந்தரம், சுத்தம், பூரணம். ஆன்மா முன்னுடல் விட்டுப் புத்துடலடைவதே சாவு எனப்படுகிறது. பழவினையால் இகவாழ்வு தீர்மானிக்கப்படுகிறது. இப்படிக் காரண காரிய வினைச்சுழலில் அகப்பட்டலையும் மானிடப் படகு கரைசேர வழியுண்டோ? வேத

முனியின் ஆவேச வுண்மை கூறுகிறது: **அம்ருத புத்ரர்களே,** கேளுங்கள்; வானேருங் கேளுங் கள்; புராதனமான **ஒன்றை** யான் கண்டு பிடித் தேன்; அது மோகவிருளுக் கப்பாலுள்ளது. அதனை யறிந்தே நீங்கள் சாவினின்று விடுபடு வீர்கள்!

**அம்ருதபுத்ரர்கள்** (சாகாப் புதல்வர்), ஆ, எவ்வளவு கம்பீரமான இன்சொல்! சகோ தரர்களே, நான் உங்களை அவ்வினிய பெயரால் அழைக்கிறேன் (கரகோஷம்.) உங்களைப் "**பாவி களா**" என்று ஹீந்து அழைக்க மறுக்கிறன். நீங்கள் கடவுள் மைந்தர்கள்; நித்யானந்தர்கள். புனிதர், பூரணர்; நீங்கள் உலகில் தெய்வத் தன்மை கொண்டிருப்பவர்கள். "**பாவிகள்?**" —ஆ! மனிதனை அப்படி யழைப்பதே பாவம். அது மனித வியல்பை இகழ்ந்ததாகும். வாருங் கள், சிங்கங்களே! நீங்கள் ஆடுகள் என்னும் மோகத்தை உதறித்தள்ளுங்கள்! நீங்கள் நித்யாத் மாக்கள், சுதந்தர ஜீவர்கள், நித்யானந்தர்கள். நீங்கள் ஜடமா; உடலா? இல்லை. ஜடம் உங்கள் அடிமை. நீங்கள் அதன் அடிமையல்லீர். இயற்கை விதிகளனைத்திற்கும் மேலே ஒருவன் உள்ளான்! அவன் கட்டளையால் காற்றடிக்கிறது; தீ எரி கிறது; முகில் பொழிகிறது; சாவு உலகில் நட மாடுகிறது. அவனியல்பென்ன? அவன் எங்கு முள்ளவன், சுத்தன், அருவன், எல்லாம் வல் லவன், பரம தயாளு! "நீ எங்கள் தந்தை, தாய், நண்பன்; நீ வீரியத்தின் ஊற்று; எங்களுக்கு வீரிய பலந் தந்தருள்! நீயே உலகைக் தாங்கு வோன். இச்சிறு வாழ்வு மூட்டையைப் பொறுக்

கத் துணை செய்!'' என்று வேத ரிஷிகள் பாடினர். அவனை வழிபடுவதெப்படி? அன்பால்! இகம், பரம் இரண்டிலும் உள்ள எதனிலும் அவனே அரியோன், காதலிக்கத் தக்கோன், வணங்கத் தக்கோன். நீரில் தாமரைபோல மனிதன் உலகில் ஒட்டாது வசிக்க வேண்டும்; உள்ளத்தை இறைவனிடம் வைத்துத் தொழில் செய்ய வேண்டும். "ஆண்டவனே! செல்வம், செல்வர், கல்வி எதுவும் வேண்டேன்; நினதிச்சை அவ்வாறிருப்பின், ஆயிரம் இடர்களையும் தாங்குவேன். பயன் கருதாது நின்னை அன்பிற்காகவே அன்பு செய்யும் வரமருள்!'' என்பது அன்பனின் வேண்டுகோள். கண்ணனின் அன்பன் யுதிஷ்டிரனை, பகைவன் அரசினின்றுந் துரத்தினன். யுதிஷ்டிரன் இமயமலையைச் சேர்ந்த ஒரு காட்டில் வசிக்கையில், அவன் மனைவி, "உலகில் மாசற்ற நல்லோரான தாங்கள் இடர்ப்படுவதேன்?'' என்று கேட்டாள். "இமயமலையைப் பார்! அஃது எனக்கு எதுவும் தருவதில்லை. அதன் அழகுப் பெருமைக்காகவே அதை இயல்பாக நான் நேசிக்கிறேன். அதுபோல் இறைவன் அழகின் ஊற்று, எல்லா மேன்மைகளுக்கும் தாயகம். அவனே அன்பு செய்யத்தக்கவன். ஆதலால், பலனை எதிர்பாராமல் அவனையே அன்பு செய்கிறேன். அவனிச்சை எது வேண்டுமெனினும் செய்யட்டும்! நான் அன்பிற்காக அன்பு செய்கிறேன். அன்பால் பேரஞ் செய்யவில்லை என்றார்.'' (கரகோஷம்!)

ஆன்மா, தெய்வத் தன்மையுள்ளது. ஆன்மா உடலில் கட்டுப்பட்டுள்ளது; பந்தம் சிதைந்தால், முக்தி யெய்தும். ஆண்டவனருளால் தூயர் முக்தி

பெறுவர்; சுத்தமே அவனருளைத் தரும். தூய வுள்ளத்தில் அவன் துலங்குவான். மாசறுதூயன் இவ்வாழ்விலேயே இறைவனைக் காண்கிறான். பிறகே, மனக்கோணல்களும் மயக்கங்களும் ஒழியும். ஹிந்து மதம் அனுஷ்டான மதம்; வார்த்தையாடும் மதமன்று. "நான் ஆன்மாவைக் கண்டேன்; கடவுளைக் கண்டேன்" என்று ஹிந்து முனி நிதர்சனமாகக் கூறுவான். பூரணம் பெற்று, தெய்வத் தன்மை யடைந்து கடவுளைக் காணலே—பரம பிதா போலவே பூரணம் பெறலே—ஹிந்து தருமம். கடவுளடைவே களிப்பு; கடவுட் காட்சியோன் கரை கடந்த களிப்புறுவான். இஃது இந்தியாவிலுள்ள எல்லாச் சமயங்களின் சம்மதமுமாகும்.

பூரணன்மா பிரம்மத்துடன் ஒன்றுகிறது; பிரம்மம், சச்சிதானந்தம்; அதுவானால்தான் இன்பம். சாக்காட்டுலகில் நித்தியப் பொருள் அதுவே! மாறும் உலகில் மாறாதுள்ளதும் அதுவே. எப்பெயர் பெறினும், மலர் ஒரே மணங் கமழும்; அதுபோலப் பல நாம ரூபங்களால் ஹிந்து ஒரே கடவுளையே வணங்குகிறான். எல்லா ஜீவர்களும் பரமாத்ம விளக்கமே.

நான் சிறுவனாயிருக்கையில், ஒரு பாதிரி ஜனங்களுக்கு உபதேசித்துக் கொண்டிருந்தார். அவர் பேசிய மதுரமான விஷயங்களில், "உங்கள் விக்ரகத்திற்கு ஓர் உதை கொடுத்தால், அது என்ன செய்ய முடியும்?" என்றார். அக்கூட்டத்தில் ஒருவர், "உங்கள் சாமியை வைதால், அது என்ன செய்யும்?" என்றார். "செத்த பிறகு நீ தண்டிக்கப்படுவாய்" என்றார் பாதிரி.

"என் விக்ரகமும் நீ இறந்தபோது உன்னைத் தண்டிக்கும்" என்றார் அவர். (கரகோஷம்.) கிறிஸ்தவர் சர்ச்சுக்குப் போவானேன்? சிலுவையைக் கொண்டாடுவானேன்? வானைநோக்கித் தொழுவானேன்? கத்தோலிகர் கோயிலில் அவ்வளவு சிலைகளிருப்பானேன்? ப்ரோடஸ்தாந்தியர் தொழும்போது அவர்கள் மனதில் பல வடிவங்களிருப்பானேன்? என் சகோதரர்களே, மனவுருவின்றி எதையும் நாம் நினைக்க முடியாது. உருவம் ஏகாக்ரப்படுத்துகிறது. சிலை, கோயில், சர்ச்சு, நூல்கள் எல்லாம் மனிதன் தெய்வ வுணர்வு பெறும் சாதனங்கள். அவை அத்யாத்மக் குழந்தைப் பருவத்தின் விளையாட்டுச் சாமான்கள்.

புறவழிபாடு (உருவழிபாடு), தாழ்ந்தது: மனவழிபாடு நடுத்தரம்; கடவுளை யறிதலே உயர்வழிபாடு. இரவி, மதி, மீன்கள், மின்னல் எல்லாம் அவன் ஒளியாலேதான் நிலவுகின்றன. உருவழிபாடு ஹிந்து மதத்தில் கட்டாயமன்று: ஹிந்துவானவன் வேறுபாடுகளில் ஒருமைப்பாட்டைக் காண்கிறான். பிற மதங்கள் சில கோட்பாடுகளை வற்புறுத்துகின்றன. கடவுளை அனுபவத்தில் காணவே முடியும். 'உரு, சிலுவை, பிறை எல்லாம் கடவுட்பாவனையை மாட்டி வைக்கும் ஆப்புகள் (pegs)' என்றே ஹிந்து அறிந்திருக்கிறான். மனப்பக்குவம் பெறாதவர்களுக்குக் கடவுளைப்பற்றி ஒரு பாவனை கற்பிக்கவே உருவம் வழங்கப்படுகிறது. 'பல வழிகளால் ஒரே கடவுளை யடைவதே சர்வசமயப் பொருள்' என்பது ஹிந்துவிற்குத்தெரியும். பலநிறக்கண்ணாடிகளிற் பாய்ந்து வரும் ஓர் ஒளி போன்றது கடவுளறிவு: "கயிற்றில் மணிகள்

4

கோத்திருப்பது போல சேதனத்தில் எல்லாம் தொடுக்கப்பட்டுள்ளன. பரமபரிசுத்தம், அற்புத சக்தி ஆகியவை மனித வாழ்வைத் தூய்மையாக்கி எங்கு ஓங்குகின்றனவோ, அங்கு யானிருக்கிறேன் என்றறி!" என்கிறார் கிருஷ்ண பகவான். "நமது ஜாதி மதத்திற்கு அப்பாலும் பூரண புருஷர் உள்ளனர்" என்கிறார் வியாசர். புத்தர்களும் ஜைனர்களும் கடவுளை யொப்பவில்லையானாலும், மனிதன் தெய்வத் தன்மையை யடைவதை யொப்புகின்றனர். அவர் தந்தையைக் காணா விடினும் மைந்தனை ஆன்மாவைக் காண்கின்றனர். மைந்தனைக் கண்டவன் தந்தையைக் கண்டவனே. உலகளாவிய ஒரு மதமானது, இடம் காலங்களிற் கட்டுப்படாது. அது, அதன் சம்மத மான கடவுளைப் போலவே அகண்டமானது. அதன் சூரியகாந்தி, கிருஷ்ணபக்தர், கிறிஸ்து, நல்லோர், பொல்லோர் யாவருக்கும் சமமமாகப் பரவும். அதன் அகண்ட சமரஸத்தில் உலகிலுள்ள எல்லாச் சமயங்களுக்கும் இடந் தந்து, உயர்ந்தோரையும் தாழ்ந்தோரையும் தன்னுள்ளடக்கிப் படிப்படியாக உயரும்; அந்த மதத்தில் வெறுப்பிற்கும் கொடுமைக்கும் இடமிராது. ஆண் பெண் இருவரிலும் அது ஒரே தெய்வத் தன்மை காணும்; மனிதனிலும் அவனுள் உள்ள கடவுளைக் காணவே அது கருதும்; அத்தகைய மதத்தை அனைவரும் ஒப்புவர். ஹிந்துக்களின் பிரம்மம், ஜாரதுஷ்டிரரின் அஹுரா மஜ்தன், பௌத்தர்களின் புத்தன், யூதரின் யஹோவா, கிறிஸ்தவரின் பரலோக பிதா என நிலவும் கடவுள், ஒன்றே. 'எல்லச் சமயசாரமும்—ஒரு கடவுளே' என்று முழங்குக! அமெரிக்கர்களே, உங்களுக்கு இறை

வன் சக்தி யருளுக! வாழ்க கொலம்பியா —சுதந்தரத்தாய்! அயலான் இரத்தந் தோயாத கை, உனதே! 'அயலானைத் திருடுதலே செல்வனாகச் சுருக்குவழி' யென்று ஒருகாலும், கருதாத கொலம்பியாவே, சர்வ மத சமரஸக் கொடியை நாகரிக வுலகின் முன்னே பிடிக்க நீயே கொடுத்து வைத்தனை! நீ வாழ்க! (பலத்த கரகோஷம். பேஷ்!—பேஷ்!)

## உ. முடிவுரை

அன்பரீர்,

இன்னும் சிறிது செவிசாயுங்கள்! இன்று, உலக சர்வமத சங்கம் நிறைவேறியது. இதைத் தொடங்கியோர்பால் ஆண்டவன் அருள் பாலித்து, அவர்களுடைய தன்னலமற்ற உழைப்பிற்கு வெற்றிமுடி சூட்டினன். இந்த உயர்ந்த வினையைக் கருதிய தாராள மனங்கொண்ட உண்மையாளருக்கு எனது வந்தனம். இம்மேடையிற் பொழிந்த தாராளக் கொள்கைகள் அடங்கிய சொற்பொழிவுகளுக்கு எனது வந்தனம். என்மேல் மாறா அன்பு பூண்டு, மதவேற்றுமைகளை நீக்கும் கருத்தையும் ஏற்ற இச்சபை யறிஞருக்கு எனது வந்தனம். இடையிடையே சில அபஸ்வரங்களும் கேட்டன. அவற்றிற்குச் சிறப்பாக எனது வந்தனம்; அவற்றின் வேறுபாட்டால் நமது இசையணி இன்னும் இனிதொலித்தது. சமய வொற்றுமைக்குரிய பொதுமையைப் பற்றி மிகவும் விரித்துரைக்கப்பெற்றது. ஒரு மதத்தை யழித்து இன்னொரு மதம் ஓங்குவதால் இந்தச் சமரஸம் ஏற்படுமென்று யாராவது கருதினல், 'சகோதரரே, உங்கள் எண்ணம் பலியாது'

என்று நான் அன்னாருக்குச் சொல்லுகின்றேன்; கிறிஸ்தவன் ஹிந்துவாக வேண்டுகிறேனா? ஹிந்து அல்லது பௌத்தன் கிறிஸ்தவனாக வேண்டு கிறேனா? சிவ சிவா, இல்லை!

பூமியில் விதையை விதைக்கிறோம். நிலமும், நீரும் காற்றும் அதைச்சுற்றி யுள்ளன. என்றாலும், விதை மண்ணாக, காற்றாக, அல்லது நீராக மாறு கிறதா? இல்லை; அஃது ஒரு செடியாகிறது; அதன் சுதர்மப்படி காற்றையும் மண்ணையும் நீரையும் தாவர சத்தாக்கியுண்டு வளர்கிறது; அம்மாதிரியே மதமும். கிறிஸ்தவன், ஹிந்து, பௌத்தனாக வேண் டுவதில்லை; ஹிந்து அல்லது பௌத்தன், கிறிஸ்தவ னாக வேண்டுவதில்லை. ஆனால், ஒவ்வொன்றும் பிற மதங்களின் சாரத்தைக் கிரகித்து, தனது தன்மை யைப் போற்றி, சுதர்மத்தில் வளரவேண்டும்.

இதுவே இந்தச் **சர்வமத சபை** உலகிற்குக் காட்டிய உண்மை. தெய்வத்தன்மை, பரிசுத்தம், கற்பு என்பன ஒருவருக்கே, ஒரு மதவாதிக்கே உரியனவல்ல; ஒவ்வொரு மதத்திலும் உன்னத வொழுக்கமுள்ள மகான்களுளர் என்பதை அவை தெளிவுபடுத்தின. உண்மை இப்படி யிருக்கை யில், எவனாவது ஒருவன் பிறர் மதமழித்துத் தனதே வாழக் கருதுவானாயின், அவனைக் குறித்து மனதார இரங்கி, எத்துணை எதிர்ப்பு வரினும் அதி சீக்கிரம் உலகிலுள்ள ஒவ்வொரு சமயக் கொடியிலும், **"போரன்று, உதவியே; அழிப்பன்று, அணைப்பே; விரோதமன்று, சாந்தமும் சம ரஸமுமே"** என்று எழுதித் திகழ்வதை காண்பிப் பேன்! ஓம் தத்ஸத்" (நீண்ட கரகோஷம்! விவே கானந்த ஸ்வாமிகி ஜே! ஜே! ஜே!)

* அக்கிராசனர்: சீமான்களே, சீமாட்டிகளே, நமது சபை இனிது நிறைவேறிற்று. உலகின் பல மதங்கள், மத சங்கங்களின் பிரதிநிதிகள் அவரவர் சமயச் சார்பாகத் திறமையுடன் பேசியதற்கு வந்தனம். இந்தச் சர்வ சமய மகா சபையின் நடு நாயகமாகவும், கம்பீர வாணியாகவும் விளங்கிய வேதாந்த ஹிந்து தருமப் பிரதிநிதி, சுவாமி விவேகானந்தர், உண்மையாக சர்வமத சமரஸக் கொடியை இங்கு நாட்டி விட்டார்! அவருடைய தோற்றமும், அருள்வாக்கும், ஆவேசமும், உண்மையான ஆர்வமும், சர்வ சமத்வ வுணர்வும், அன்பும், நம்மனைவர் இதயத்தையும் கவர்ந்து விட்டன. அவர் எழுந்தபோது ஹிந்து தருமம் எழுந்தது! அவர் கர்ஜித்து உட்கார்ந்தபோது ஹிந்து தருமம் கம்பீரமாக நிலைநாட்டப் பெற்றது! இதற்குள் அமெரிக்கா முழுதும் அவர் புகழ் பரவி, எங்கும் அவர் உருவமும், மொழிகளும் விளங்குகின்றன; ஒரு காலம் சந்யாசியாகத் திரிந்த அவர், உலகில் ஒப்பற்ற மகானாக உயர்ந்தார். அவர் பேச்சைக் கேட்ட பின், இன்று "நியூயார்க் ஹெரால்ட்" (New York Herald) சொல்வதுபோல், "அறிவு சான்ற ஹிந்துக்களிடையேபாதிரிமார்களை அனுப்புவதே மடமை" எனப்படுகிறது. "போஸ்டன் ஈவினிங் டிரான்ஸ்கிரிப்ட்" (Boston Evening Transcript) சொல்வதுபோல்,"அவரே இந்தச் சர்வமதசங்கத்தில் மலைபோல கம்பீரமாக விளங்கினார்; அவர் மேடை யேறும்போ

---

* விவேகானந்தரைப்பற்றி அமெரிக்காவெங்கும் புகழ் பரவியது. அதை அக்கிராசனர் வாயிலாகக் கற்பனையாக இந்த இட்த்தில் பொருந்தக் கூறுகிறோம்.

தெல்லாம் சபை ஆனந்த பரவசத்தில் நெடுநேரம் கரகோஷம் செய்தது! கூட்டம் கலையும்போது விவேகானந்தர் பேசப்போகிருரென்ருல், எல்லாரும் அப்படியே சித்திரப்பாவையாக அமர்ந்ததை நாம் கண்டோம்! உருவிலும், திருவிலும், உரையிலும், அறிவிலும், நெறியிலும், துறவிலும் அவருக்கிணையில்லை. அவர் கடவுளருள் பெற்ற சொற்பொழிவாளர்; அவரே இச்சங்கத்தின் உண்மையைத் தெளிவாகக் கூறினர்." இவ்வாறு பத்திரிகைகள் ஒரே முகமாக இன்று புகழுவது சாலப்பொருந்தும். இச்சங்கத்தின் பௌதிக சாஸ்திரக் கூட்டத்தலைவரான மிஸ்டர் மெர்வின் மேரி ஸ்நெல், அவரை மெச்சிக் குதூகலித்தார்! சுவாமியே இந்தச் சபையில் மிகப் பெருமை பெற்ருர். "அவர் மனிதரில் மன்னர்" என்று கிறிஸ்தவர்கள் கூறினர்! (கரகோஷம்). சபையை அற்புதமாக நம் சுவாமி விவேகானந்தர் தம்வசப் படுத்தினர்; அவருக்கு வந்தனம்! அவர் நாட்டிற்கு வந்தனம்; அவர் கடைப்பிடிக்கும் வேதாந்த மதத்திற்கு வந்தனம். நண்பர்களே, காலங் கடந்துவிட்டது. உங்களனைவருக்கும் வந்தனம் சொல்லி இதனுடன் அமர்கிறேன்.

ஒருவர்: கனவான்களே, சீமாட்டிகளே! இனி சுவாமிஜீ அமெரிக்கா எங்கும் சுற்றுப்பிரயாணஞ் செய்து பிரசங்கம் செய்ய ஏற்பாடு செய்திருக்கிறது. வேதாந்த ஹிந்து தருமத்தைப்பற்றியும், யோக சாதனங்களைக் குறித்தும், புத்த மதம் கிறிஸ்தவ மதம் இஸ்லாம் முதலிய பல மத தத்துவங்களைப் பற்றியும் சுவாமிஜீ விரிவாகப் பேசுவார். அமெரிக்காவில் பிர

சங்கங்கள் முடிந்ததும் இங்கிலாந்து சென்று ஐரோப்பாவைச் சுற்றி, தமது தாய்நாடு சேருவார்.

[சபைப் பிரதிநிதி, கொடுத்த சீட்டைப் படித்தல்]

அக்கிராசனர்: சுவாமிஜீ, எங்களுக்கெல்லாம் வேதாந்த வுண்மைகளை நன்கு பயிற்றி இங்குச் சங்கங்கள் ஏற்படுத்த வேண்டும். அதற்கு வேண்டிய பொருளுதவி நாங்கள் தருகிறோம். சுவாமிஜீ முடிவாகச் சிறிது பேச வேண்டும் என்கின்றனர் சபையோர்.

விவே: "அருமைச் சகோதரர்களே, சகோதரிகளே! நீங்கள் இப்போது பேசிய புகழ்மொழிகள் என் குருநாதரைச் சேருக! அவர் சக்தியே எளியேன் மூலம் தனது உண்மையைப் பேசியது! பகவான் இராமகிருஷ்ண பரமஹம்ஸர் — அவரே என் சத்குரு! எல்லா யோக வழிகளிலும் தேர்ந்து, சர்வ மதங்களையும் முழுதும் அனுபவித்து, கடவுட் காட்சியும் கடவுட் சக்தியும் கடவுட் பெருமையும் பெற்ற அவதார புருஷர் அவரே! அவர் ஊட்டிய ஞானப்பாலின் ஒரு துளியே, இன்று உங்களுக்கு இவ்வளவு இன்பமளித்தது! கடவுளைக் காணப் பசியெடுத்தலைந்த எனக்கு, "நான் கடவுளைக் காண்கிறேன்; உனக்கும் காட்டுவேன்" என்று உறுதி சொல்லி அவ்வாறே அனுபவிக்கச் செய்த குருநாதர் என்னை நடத்தி இங்கு சேர்த்தார். நான் பேசியதில் ஓர் உண்மை, ஓர் ஆத்ம ஞானமொழி யிருக்குமாயின், அஃது எனது குருநாதரைச் சேர்ந்ததே;

நான் பேசியதிலுள்ள பிழைகள் என்னைச் சேர்ந் தனவே. "மதக் கொள்கைகள், கட்டுப்பாடுகள், வகுப்பு வாதங்கள், சர்ச்சுகள், கோயில்களைப் பாராட்டாதே! ஒவ்வொரு ஜீவனிடமும் ஆத்ம பிரகாசமுள்ளது. இதை தூண்டத்தூண்ட மனிதன் சக்தி பெறுகிறான். ஆன்மாவை முதலிற் பெறு! பிறரைத் தூஷிக்காதே! ஒவ்வொரு மதமும் அததன் மட்டிற்கு நலமுடையதே. தருமம் என்பது, மொழியன்று, பெயர்களன்று, வகுப்புகளன்று; அஃது ஆத்மானுபவம். ஆத்ம சக்தி பெற்று அதைப் பிறருக்குக் கொடுக்கத் தக்கவர்களே சக்தி மணி விளக்குகள். அத்யாத்ம வுண்மை யறிந்து பிரம் மத்தை யடை!" என்பன அவருடைய உபதேச சாரம். அன்பர்களே, என் குருநாதரைப் பற்றி விரிவாக நியூ யார்க்கில் பேசக் கருதியுள்ளேன். இரவு அதிக நேரமாயிற்று. உங்கள் அன்பிற்கு அன்புள்ள நன்றி செலுத்தி இத்துடன் நிறுத்திக் கொள்ளுகிறேன். ஜய இராமகிருஷ்ண பரமஹம்ஸ குருமகராஜ்கீ ஜே!"

எல்லாரும் :- லாங் லிவ், பரமஹம்ஸ! லாங் லிவ் விவேகானந்தா!

(Long Live Paramahamsa! Long Live Vivekananda!

அக்கிராசனர் :-இஃதுடன் கூட்டம் முடிந்தது.

[எல்லாரும் கரகோஷத்துடன் செல்லல். விவேகானந்தருக்குப் பலர் செல்லுகையில் மாலை சூட்டுகின்றனர்.]

## 7 உலகெங்கும் புகழ்!

[பாஸ்கர சேதுபதி தம் திவானுடன் சுவாமிஜீயின் புகழைப்பற்றியும் வரவைப்பற்றியும் பேசுகிருர்.]

பாஸ்: எங்கும் விவேகானந்தமயம்! எட்டுத் திசையும் அவர் புகழே எதிரொலிக்கிறது! சிகாகோவில் இந்த வேதாந்தச் சிம்மம் கர்ஜித்து, உலகை அதிரச் செய்தது! பத்திரிகைகளெல்லாம் விவேகானந்த மயம்! கணக்கற்ற சொற்பொழிவுகளாலும், யோக வகுப்புகளாலும் வேதாந்த சங்கத்தை நிலை நிறுத்தி, அமெரிக்காவை ஞான வெற்றிகொண்டு, இங்கிலாந்தில் வேதாந்த சங்கம் நிலை நாட்டி, ஐரோப்பாவில் சுற்றுப் பிரயாணஞ் செய்து, 15-ஆம் தேதி கொழும்பு வந்து சேருகிருராம்!

திவான்: மகாராஜா! கொழும்பில் வரவேற்பிற்குப் பலமான ஏற்பாடுகள் செய்திருக்கின்றனர்.

பாஸ்: ஏன்? நாடு முழுதுமே திருவிழாக் கொண்டாடுகிறது! பாம்பன், இராமேஸ்வரம், இராமநாதபுரம் மூன்றிலும் நமது வரவேற்பு. பரமகுடி, மானமதுரை, சிவகங்கை, மதுரை, கும்பகோணம், இன்னும் பாதை நெடுக, வரவேற்புத் திருவிழா முழங்கும். சென்னையில் மிகவும் விமரிசையான கொண்டாட்டத்திற்கு ஏற்பாடு செய்திருக்கின்றனர். ஸர். எஸ். சுப்ரமண்ய ஐயரே வரவேற்புத் தலைவர். சென்னையில் இராமகிருஷ்ண

மடமொன்று ஏற்படுத்தப் போகிருர்கள். அங்கே நமது பங்களாவில் சுவாமிஜீ தங்க ஏற்பாடு செய் திருக்கிறது. சென்னையிலேயே, மகா தருமவானும், சுவாமிஜீக்குப் பேருதவி புரிந்து கப்பலேற்றிய பேறு பெற்றவருமான க்ஷேத்ரி மகாராஜாவின் வரவேற் புப் பத்திரமும் படிக்கப்படும். சுவாமிகள், அங் கிருந்து நேராகக் கப்பலில் கல்கத்தா செல்வார்கள். கல்கத்தாவில் சொல்ல வேண்டுமா ? வெகு விமரிசை யான நல்வரவேற்பு ஏற்பாடா யிருக்கிறது. தர்பங்கா மகாராஜாவே வரவேற்புச் சங்கத் தலைவர். தவராஜ சிங்கமன்ருே ? உலகை முழுதும் ஒரு நாளில் ஞான வெற்றி கொண்ட வேதாந்த வீரகேசரிக்கு, பாரத நாட்டின் புனிதப் பெருமையை மேனுட்டில் நிலை நாட்டிய தீரருக்கு, என்ன சிறப்புத்தான் செய்யத் தகாது ! என் குருநாதர், என் எண்ணங்களை நிறை வேற்ற வந்தசமய சஞ்சீவி. சுவாமிகள் நீடூழி வாழ்க!

திவான் : மகாராஜா ! பாரததேவியே தங்கள் வாக்கினின்று அவரை அமெரிக்காவிற்குச் செல்லத் தூண்டி எல்லா வுதவியும் புரிந்தாள் ! தங்கள் வீரன் வென்ருன் !

பாஸ் : ஆமாம் ; நாம் அவர் வந்து இறங்கு மிடம் நாட்டவேண்டிய வெற்றித்தூண் (40 அடி உயரம்) தயாராயிற்ரு? அதில் எழுத்துக்கள் செதுக்கி யாயினவா ?

திவான் : மகராஜ், எல்லாம் தயார். அதில் அடியில் வரும் வாக்கியங்கள் செதுக்கப்பட்டுள்ளன:

"*Satyameva jayate !*

This Monument erected by *Bhaskara Sethupathi* the Rajah of Ramnad, marks the sacred spot where *His Holiness Swami Vivekananda's* Blessed Feet trod on Indian soil, together with the Swamiji's English disciples on His Holiness's return from the Western Hemisphere, where glorious and unprecedented success attended His Holiness's philanthropic labours to spread the religion of the Vedanta"—"*27th January, 1897*"

பாஸ்: சரி, நமது கப்பலை நன்றாக அலங்கரித்து, சுவாமிகளைப் பாம்பன் கரைக்கு அழைத்துவரத் தயாரா யிருக்கவேண்டும். நாமே குருநாதனை வரவேற்போம். உடனே வரவேற்புப் பத்திரம் படித்து, இராஜா பங்களாவிற்குச் சுவாமிகளின் வண்டியை நாமே ஊர்வலமாகக் கொண்டு வரவேண்டும். பாம்பனில் மூன்று நாள் தங்கி சுவாமிகள் இளைப் பாறட்டும். இராமேஸ்வரத்தில் வெகு விமரிசையாகக் கோயில் மரியாதைகளுடன் வரவேற்று அந்த மகான் வந்ததின் ஞாபகார்த்தம் ஆயிரக்கணக்கான ஏழைகளுக்கு! அன்னவஸ்திரம் தரவேண்டும்—ஏழைகளுக்காக அவர் மனம் அல்லும் பகலும் மெழுகு போல் உருகுகின்றது! [சேவகன் வருதல்]

சேவ: மகாராஜா, தந்திகள்! [கொடுத்துச் செல்கிறான்.]

பாஸ்: (தந்தி படித்து) ஓகோ, சரிதான், சென்னையில் பெரிய அமளி—ஊரெல்லாம் கூடி

வரவேற்பு நடத்துகிறது. சுவாமிகள் 15.1-1897 மதியம் கொழும்பிற்கு வருகிருராம். ஆங்கிலச் சீடர்களில் குட்வின் என்பவர் உடன் வருகிருர். இவரால்தான் சுவாமிகளின் அருள் வாக்குகள் சுருக்கெழுத்துக்களால் எழுதப்பெற்று உலகெங்கும் பரவின. சுவாமிகள் அமெரிக்காவில் "Thousand Island Park"-ல் அருளிய ஞான மொழிகள் இவரால் எழுதிச் சேர்த்து வைக்கப்பட்டன. இவர் சுவாமிக ளிடம் பரம பக்தியுள்ளவர். 23-வயதுதான் ஆகிற தாம்; நல்ல விவேகி. அவருடன், ஸேவியர் தம்பதி கள் வருகின்றனராம்: இவர்கள் ஆங்கிலேயர்கள்; சுவாமிகள் இலண்டனில் செய்த பிரசங்கங்களில் ஈடு பட்டு இவர்கள் தமது வாழ்வை அவர் பணிக்கே அர்ப்பணஞ்செய்து விட்டனர்; பிரபுத்த பாரதத்தை அல்மோராவிலிருந்து நடத்தப்போகிருர்கள்; சுவாமி களின் திருவாக்குகளை யெல்லாம் தொகுத்து வெளி யிடப்போகிருர்கள். இவர்களைச் சுவாமிஜி பெற் ருேர்போல நேசித்துத் தாம் பாரத நாட்டிற்குச் செய்யக் கருதும் பணிகளையெல்லாம் சொல்லுகிரு ராம்.

திவான்: மகாராஜாவிற்கு இச்செய்திகளெல் லாம் முன்பே தெரிந்திருக்கின்றனவே!

பாஸ்: சுவாமிகள் அடிக்கடி கடிதம் எழுது கிருர்கள். நண்பர்களும் எழுதுகின்றனர். அவர் புகழ் பகல் வெளிச்சம்போல் எங்கும் பரவியுள்ளது. இன் னும் அமெரிக்காவில் மிஸ் வால்டோ எனும் உத்தமி, இங்கிலாந்தில் மார்கரட் இ. நோபிள் என்னும் அரிய அறிவாளி (இவருக்கு நிவேதிதை எனும் பெயர்

கொடுத்திருக்கிருர்) முதலியோர் பாரதநாட்டு சேவைக்கே தமது வாழ்வை ஈந்து, இங்கு வரப் போகின்றனராம். இன்னும் எத்தனேயோ உத்த மர், உத்தமிகள் சுவாமிகளுக்கு உள்ளன்பராயினர். ஆக்ஸ்ஃபோர்ட் சர்வகலாசாலேப் புலவர் மாக்ஸ் முல்லர், சுவாமிகளே வரவேற்று நெடுநேரம் பரம ஹம்ஸரின் திருவரலாற்றையும் உபதேசங்களேயும் கேட்டு, அவற்றை நூலாக எழுதிக்கொண்டிருக் கிருராம். இலண்டன் பத்திரிகைகள் சுவாமிகளின் போக்குவரத்தை விரிவாக வெளியிட்ட வண்ணமா யிருக்கின்றன. பாரிஸ், ஜினீவா, பர்லின், ரோம் எனேய ஐரோப்பிய நாடுகள் முழுதும் சுற்றுப் பிரயாணஞ் செய்துவருகிருர். மேனுட்டை அவர் ஞான வெற்றிகொண்டார் ! நமது வேதாந்தச் சிங்கத்தை மன்னருக்கும் அரிய சிறப்புடன் வர வேற்போம் !

திவான் : அப்படியே ஆகுக, மகாராஜா, இன்று இராமேஸ்வரம் செல்ல வேண்டுமென்று உத் தரவானதே !

பாஸ் : ஆம், புறப்படுவோம். [செல்லல்]



## 8. பாரதநாட்டின் வரவேற்பு

[குட்வின், மிஸ்டர் ஸேவியர், மிஸஸ். ஸேவியர், நிரஞ்சனனந்த சுவாமி முதலியோருடன் விவேகானந்தர் வந்ததும், இராஜா பாஸ்கர சேதுபதி வரவேற்கிறார்.]

எல்லாரும்: குருமகராஜ் சுவாமி விவேகானந்தருக்கு ஜே!

பாஸ்கர: குருநாதா, அடியேன் ஆனந்தக் கடலில் மூழ்கி, வாயற்றுப் பணிகின்றேன்!

விவே: ஜய மகாதேவ!

பாஸ்கர: குருதேவரே, இப்படி யமருங்கள்! [மாலை சூட்டல்] மஹாத்மனே, இது தங்கள் வெற்றித் தூண்!

விவே: (வெற்றித்தூணைக் குறிப்பாகப் பார்த்து) இந்த வெற்றித்தூண் நட்டது யாரோ, அவருடைய தூண்டுதலும், எண்ணமுமே வென்றன; ஆதலின், இந்தத் தூண் தங்கள் வெற்றிக்கும் பாரத நாட்டின் வெற்றிக்கும் அறிகுறியே!

பாஸ்: அன்பன், அடியேன் வரவேற்பை ஏற்றருள்க!

[வரவேற்புப் பத்திரம் படித்தல்]

நல்வர வாகுக ஞானச் சுடரே!
எல்லா வுலகும் இறைஞ்சிடும் வீரனே!

வேத வேதாந்த விளக்கே போற்றி!
தீநறு மருந்தே, தெவிட்டறு மமுதே,
இந்தியத் தாயின் இசையே போற்றி!
வந்தனம் வந்தனம் வன்பணிக் கரசே!

வேறு

புதுவுலகும் பண்டுலகும் புத்துயிர்பெற்
றிலகிட, நம் புகழுஞ் சீரும்
முதுகடலைக் கடந்தொலிக்க, வீரமுடன்
வேதாந்த முழக்கஞ் செய்தாய்;
சுதந்தரச்சங் கொலித்திடுவாய்; பாரதரின்
சோர்வகற்றுஞ் சுடரே! மாந்தர்
இதம்பெருக வுதித்த விவே கானந்த,
நின்பெருமை என்றும் வாழ்க!

[பத்திரத்தைத் தங்கச் செப்பில் வைத்துத் தருதல்]

எல்லாரும்:-சத்குரு இராமகிருஷ்ண பரமஹம்ஸ தேவருக்கு ஜே! வேதாந்த கேசரி விவேகானந்த சுவாமி மகராஜ்கீ ஜே!

பாஸ்:-ஸ்ரீ பரமஹம்ஸ யதிராஜதிக்விஜய கோலாஹல, ஸர்வமத ஸம்ப்ரதிபன்ன, பரம யோகீஸ்வர, ஸ்ரீமத் பகவான் ஸ்ரீராமக்ருஷ்ண பரமஹம்ஸ கரகமல ஸஞ்சாத ராஜாதிராஜ சேவித ஸ்ரீ விவேகானந்த ஸத்குரு ஸ்வாமிகீ ஜே!

எல்லாரும்:-ஜே! ஜே! ஜே!

[விவேகானந்தர் மேடையேறிப் பாரதநாட்டிற்கு வேண்டிய உபதேசம் செய்கிறார். குட்வின் சுருக்கெழுத்தில் எழுதிக்கொள்கிறார்.]

விவே :- ஜயசங்கர்! சிவோஹம்! ஜ ய ரா ம க்ருஷ்ண!

சகோதரர்காள், சகோதரிகாள்! உங்கள் நல்வரவேற்பிற்கும் இன்சொல்லிற்கும் ஆண்டவன் என்னைத் தகுதியாக்கி, நமது நாட்டிற்கும், சமயத்திற்கும் எல்லையற்ற அருட்பணி புரிய ஊக்குக! என்பால் உள்ளன்புடைய இரர்ஜரிஷியான பாஸ்கர சேதுபதி மன்னருக்கு எனது நன்றியைத் தெரிவிக்கிறேன். என்னால் ஏதாயினும் நன்மை இயன்றிருக்குமாயின் அதற்குப் பாரதநாடு இந்த நல்லோருக்குக் கடமைப்பட்டுள்ளது. அவரே சிகாகோ செல்ல என்னை மீண்டும் மீண்டும் தூண்டி, வேண்டிய ஆதரவு தந்தார். அவரைப் போன்று ஆறு மன்னர்களிருப்பின், நமது அத்யாத்மகாரியம் சிறந்த வெற்றிபெறும். அன்பர்களே, அன்பே சமயம், வைதீகச் சடங்குகளல்ல; மனமொழி மெய்த் தூய்மையுடன் அன்பு செய்தலே ஆண்டவன் அருளைப் பெறும்வழி! சுத்தம், நன்மை—இரண்டும் வழிபாட்டின் கருத்து. ஜீவர்களிடம் சிவனைக் கண்டு அன்பு செய்வோன் உண்மையாக வழிபடுகிறான்.

இப்புண்ணிய நாட்டில் பொங்கியெழும் ஆத்மஞான வெள்ளமே, உலகில் புத்துயிர் செழிக்கப் பாய்ந்து மேனாட்டின் உலகாயதத்தை மாற்றும். ஆத்மஞானத்தைத் தாராளமாக வழங்குதலே ஈகை! நமது புண்ணிய பூமி, ஞான பூமி; அத்யாத்ம தீரர்களின் பூமி; தூய துறவிகளின் நிலம். நான் மேனாடுகளைச் சுற்றிப் பல வகையினரின் பழக்க வழக்கங்களைக் கவனித்தேன். எங்கும் அரசியல் விவகாரமும், இராணுவப் பெருக்கமும், வியாபாரப் பெருக்கமும்,

இயந்திர விநோதங்களுமா யிருக்கின்றன. இந்தியாவி லேயே அத்யாத்ம ஞானம் அனைத்திற்கும் அடிப் படையாயிருக்கிறது. ஆத்ம சக்தியின் ஆற்றல் அபார மானது. உலகம் இப்போது இந்தியாவின் முகம் பார்த்து ஆத்மஞான உணவை யிரந்துநிற்கிறது. மேனாட்டு நாகரிகம் தளுக்கும் மினுக்கும் மேல் பூச் சுமே! அது, வீண் பகட்டு என்று துணிந்து கூறு கிறேன். கடவுளே உண்மை! ஆன்மாவே உள்ளது! ஆத்மஞானமே மெய்! அதை உறுதியாகக் கடைப் பிடியுங்கள்! ஆத்மசக்தியே பாரத சமுதாயத்தின் முதுகெலும்பு. ஆத்மாவை மறந்து மேனாட்டுப் போலி நாகரிக மினுக்குகளுக்கு அடிமைப்பட்டால், அன்று அழிவு நம்மைத் தொடரும். முன்னே ஆத்ம ஞானத்தில் உறுதியாக ஊன்றிக்கொண்டு, மற்ற நாட்டினரிடம் நன்மைகளைப் பெற்று நம்மவையாக்க வேண்டும். சாதி சமய வேற்றுமையின்றி, ஆத்மச் செல்வத்தை அனைவருக்கும் பொதுவாக்கவேண்டும். தீண்டாமை யொழியவேண்டும்; வேதாந்த ஞானம் எங்கும் பரவவேண்டும்; கல்வியும் தொழிலும் செழித்தோங்க வேண்டும்; பெண்ணடிமை தீர வேண்டும்; நமது நாட்டில் சமயத்தை அடிப்படை யாகக் கொண்டே சீர்திருத்தம் மேலோங்க வேண் டும்; உபநிஷத், கீதை முதலிய நம் புனித நூல் களிற் பொதிந்துள்ள ஞானத்தை முதலில் அனைவரும் அறியப் பரப்பவேண்டும். ஆத்ம ஞானத்தை எங்கும் நிலவச் செய்த பிறகு, அடுத்த வேலை இலௌகிகக் கல்வி; அடுத்தது, வாழ்வை அழகுறுத்தல்; அடுத்தது உணவளித்தல்.

மனிதர், தீரமுள்ள மனிதர் வேண்டும்! ஆத்ம ஞானமும் ஆத்மானுபவமும் விளங்கும் நூறு மனித ரிருப்பின், உலகையே மாற்றி வைக்கலாம்! அஞ்சா வுறுதியுள்ள அத்யாத்ம தீரர்கள் பாரத நாட்டின் வேதாந்தச் செல்வத்தை உலகெங்கும் வழங்கவேண்டும். அத்தகைய தீரர்களை, தியாகிகளை, அறிவொளி நிறைந்த ஆத்ம வீரர்களைப் பயிற்றுவதே எனது முதல் வேலை! வேண்டுவது ஆற்றல்; அந்த ஆற்றல் ஆத்மாவிலுள்ளது; உங்களிடமே உள்ளது; உறுதி கொள்ளுங்கள்! நாம் வேண்டுவன, இரும்புத் தசைகளும் உருக்கு நரம்புகளும்! (What we want is, muscles of iron and nerves of steel). மனிதனைத் தீரனாக்கும் மதமே நமக்கு வேண்டும். மனிதத் தன்மை விளக்கும் கல்வியே நமக்குவேண்டும். உங்கள் மனம், உடல், அல்லது உயிரைத் தளர்த்தும் எதையும் நஞ்சென விலக்குங்கள்! உண்மையென்பது ஒளியும் உறுதியும் தருவதே! தளர்வை யொதுக்கித் தள்ளுங்கள்! உபநிடத உண்மை உங்கள் முன்னுள்ளது. வேதாந்தச் சிங்கங்களாக விளங்குங்கள்! அச்ச மொழியுங்கள்!

உணருங்கள் பாரத மக்களே! முப்பது கோடி தேவர், ரிஷிகளின் சந்ததிகள் இன்றுள்ள இழிந்த நிலைமையை உணருங்கள்! கோடானுகோடி ஜனங்கள் 'பசி பசி' என்றலறுவதை உணர்ந்தீர்களா? ஏழைகளின் துயர்கண்டு உங்கள் மனங் கசிந்ததா? நாட்டைக்கவர்ந்த மடமையிருளை யுணருங்கள்; நாட்டின் வறுமை மடமையை நீக்குவதே முதல் வேலை யென்றுணருங்கள்! சோம்பல், பொறாமை, தளர்வு,

வஞ்சம் இவற்றை ஒழியுங்கள்! பலம் வேண்டும்! கீதை படிப்பதினும், காற்பந்து விளையாடுவதால் நீங்கள் விண்ணின்பமடையத் தகுவீர்கள்; உடலுறுதி கொண்டால் கீதையை இன்னுந் தெளிவாக விளங்கிக் கொள்வீர்கள். "நான் ஆன்மா; நான் சுதந்தரன்; அழிவற்றவன்: நான் அறிவு; நான் சக்தி" என்று ஆயிரந்தரம் சொல்லுங்கள்; ஆண் பெண் அனைவரையும் கடவுளென மதியுங்கள்; ஆருயிர்ப் பணி ஆண்டவன் பணியெனக் கருதுங்கள்; உலகில் எங்கும் ஞான வொளி பரப்புங்கள்! மக்களின் உள்ளத்தை ஒளியுறுத்த, உறுதி செய்ய, வேதாந்த ஞானமே வேண்டும். அது பாரதநாட்டின் செல்வம்.

நீளிரவு கழிகின்றது; நம்மை வருத்தும் இன்னல் ஒழிகின்றது; பிணமாய் விறைத்தது விழிக்கின்றது! ஒரு திவ்ய வாணி உதிக்கிறது! நமது தாய்நாடு, இந்தியா, எல்லையற்ற ஞான ஹிமாலயம்; அன்பும் வினைத் திறனும் பெற்றது; சாந்தமும் உறுதியும் சான்றது; அதன் வாக்குறுதி நாளுக்கு நாள் வலுக்கிறது. அழிந்துபோன எலும்புகளுக்கும் தசைகளுக்கும் மலய மாருதம்போல் அது புத்துயிரைக்கொண்டு வீசுகிறது. சோம்பல் ஒழிந்தது; பாரதி எழுந்தாள்! குருடரே காணர், கேடரே காணர்! நீண்ட, ஆழ்ந்த உறக்கத்தினின்று விழித்தெழுந்து விட்டாள் நமது தாய், பாரத தேவி! அவளை யாரும் இனித் தடுக்க முடியாது.இனி அவள் உறங்காள்! இனிப் புறவன்மைகள், அயலார் திறமைகள், அவளை அடக்கிவைக்க முடியா. அகண்டமானவள், பிரம்மாண்டமானவள் எழுந்து நிற்கிருள்! எழுமின்! விழிமின்! உறுதி

யுறுமின்! உண்மை யுணர்மின்! கருதிய கருமம் கைகூடும் வரை தளரா துழைமின்!—

எல்லாரும்: ஓம் தத்ஸத், ஹரி, ஓம் தத்ஸத்! சிவோஹம், சிவோஹம்!

பாஸ்கர: குருமகராஜ், தங்கள் உபதேசப்படி தமிழ்நாடு நடக்கும் என்று துணிவு கூறுகிறேன்.

விவே: தமிழ்நாட்டில் எல்லையற்ற அருட் பணி நடக்கும். தமிழன்பர்களின் அருமைபெருமை யும், அறிவும் ஆற்றலும் ஒப்பற்றன. சென்னையில் சீக்கிரம் ஒரு மடம் ஸ்தாபனமாகும். அதினின்று நாடெங்கும் வேதாந்த ஞானக் கிளை விரியும்.

பாஸ்கர: எல்லாம் பகவான் அருள்! சுவாமிகள் கல்கத்தா சென்றதும்...?

விவே: முதலில் இராமகிருஷ்ண சங்கம் ஒழுங்காக நாட்டவேண்டும். ஞானமும், கல்வியும் பரப்பி, பொதுஜன ஊழியம் செய்யத் துறவிகளைப் பயிற்றவேண்டும். பேலூரில் ஒரு மடம், மாயாவதி யில் ஒரு அத்வைத மடம், காசியில் சமூக ஊழியத் திற்காக ஒன்று நிலைநாட்டவேண்டும்.

பாஸ்கர: சங்கத்தின் விதிமுறைகள்?

விவே: 'இராமகிருஷ்ண மிஷன்' மனித ஜாதியின் நலத்திற்காக குருமகராஜ் செய்த உப தேசங்களைச் சாதனஞ்செய்து, உலகிற்குப் பரப்பும்; பல மதங்களிடையே சமரஸம் பரப்பும். "ஏகம் ஸத்; விப்ரா பஹுதா வதந்தி" (உள்ளது ஒன்று; அறிஞர் பலபடக் கூறுவர்) எனும் உண்மையைப் பல வழி

களில் உலகிற்கு விளக்கி ஒற்றுமை யுண்டுபண்ண வேண்டும். மக்களின் ஆன்ம முன்னேற்றத்திற்கும், வாழ்வின் நிறைவிற்கும் ஏற்ற அறிவையும் சாஸ்திரங் களையும் பரவச் செய்யவும், கலை தொழில் வளர்ச்சிக் கும், வேதாந்த உண்மையைப் பரப்பவும், ஆத்ம வீர ரைப் பயிற்றவேண்டும். பிறநாடுகளுக்குத் தூய துற விகளை அனுப்பி வேதாந்த ஞானத்தை விளக்கவேண் டும். இவ்வேலைக்கு நம் நாட்டில் மடங்களும் ஆசிர மங்களும் ஏராளமாக ஏற்படவேண்டும். எத்தனையோ எண்ணங்கள்!

பாஸ்கர: சுவாமிகள் அதற்கென உதித்திருக் கும்போது, இவை நிறைவேறத் தடையென்ன? சுவாமிகள், நமது பங்களாவிற்கு இனிச்சென்று ஓய்வெடுத்துக் கொள்ளவேண்டும்! எவ்வளவு உழைப்புடன் வந்திருக்கிறீர்கள்! [சீடர்களை நோக்கி] வாருங்கள்! வண்டி தயாராயிருக்கிறது!

எல்லாரும்: வேதாந்த ஞானகுரு ஸ்ரீமத் விவே கானந்த சுவாமிகளுக்கு வெற்றியோங்குக! ஜே!

[மங்கள வாத்தியம் முழங்குகிறது. எல்லாரும் ஊர்வலமாகச் செல்லுகின்றனர்.]

## 9. இராமகிருஷ்ண சங்கம்

[பிரம்மானந்தர், இராமகிருஷ்ணனந்தர், நிர்மலானந்தர், ஞானனந்தர், திரிகுணதீதர், கிரீஷ் சந்த்ரகோஷ், அழகிய சிங்கம், சிங்காரவேலு, குட்வின், சேவியர் தம்பதிகள் முதலியோர் சாரதா தேவிக்கெதிரே வீற்றிருக்கின்றனர். முன்னே பரமஹம்ஸர் படம் அலங்கரித்திருக்கிறது. விவேகானந்தர் மலர்தூவி தூப தீபம் காட்டுகிறார்.]

எல்லாரும் : (பாடுதல்)

இராகம்: சுருட்டி] [தாளம்: ரூபகம்

(பண் - கற்றுங் கெரியோம்பி)

கருணைப் பெருமானே, கனகச் சுடரோனே,
அருணே தயம்போலெம் அறிவிற் பொலிவோனே,
'திருவார் குரு நாதா சிவனே'யென வுள்ளம்
உருகும் பெருவாழ்க்கை யுடையார் பெரியாரே!
வற்ருக் கடலானே, மலையிற் பெரியானைப்
பெற்ரு ரன்பிற்கும் பேரன் புடையானைக்
கற்ருர் கொண்டாடும் காட்சிக் கரியானைப்
பொற்ரு மரைப்பாதம் போற்றிப் பணிவோமே!

ஜய ஸத்குரு மஹராஜ்கீ ஜே!

ஜயராமக்ருஷ்ண, ராமக்ருஷ்ண, ராமக்ருஷ்ண! ஹரிஹரி! ஹரிஹரி! ராமக்ருஷ்ண, ஜய ஜய ஜயஜய ராமக்ருஷ்ண!

[நாமாவளி முடிந்ததும் விவேகானந்தர் சாரதா தேவியின் திருவடியில் வீழ்ந்து துதிக்கிறார்:]

விவே: அன்னையே, யான் செய்த பணியும் பயனும் உன் மலரடிக்கு நிவேதனமாகுக! நின் அருளால், ஆதேசத்தால் எல்லாம் நிறைவேறியது! தெய்வத்தாயே! குருதேவர் நின்மூலம் சக்தி வடிவாக எங்களுக்குக் காட்சி யளிக்கிறார்!

[பணிதல்]

தாயே அந்தக் கடல்போன்ற திருச்சபையில் மேடை ஏறும்போது நின்னையே துதித்தேன்! நீயே என் வாக்கினின்று ஞானமழை பெய்தாய்! எல்லாம் நின்னருள்.

சாரதா: அருமை மைந்தனே, குருதேவரின் சக்தி நின் வடிவாக உலகில் அற்புதம் புரிகிறது. நின் புகழ் ஓங்குக! நின்பணி வெற்றிபெறுக! என் செல்வனே, நீ நீடுவாழ்க! குருதேவர், நீயாக விளங்குகின்றார்! அவர் அருளிய ஒவ்வோர் உண்மையும் வென்றது!

எல்லாரும்: ஜய சாரதாதேவி, தெய்வ மாதாஜீகி ஜே!

விவே: அன்பர்களே, ஸ்ரீ இராமக்ருஷ்ண சங்கத்தை அணிபெற அமைத்து, நாடெங்கும் பல அருட்பணிகள் தொடங்கினோம். குருதேவர் எதற்காக அன்பும், அறிவும், யோக சக்தியும் ஊற்றி நம்மை வளர்த்தாரோ, அந்தக் காரியத்தை அவரே நம்மூலம் நிறைவேற்றினார். மறுபடி மேனாட்டிற்குச்

செல்ல ஏற்பாடாகிறது. இம்முறை வேதாந்த மதத்தைப் பலமாக அங்கு ஊன்றி, பாரத தருமத்தின் வெற்றிக் கொடியை நாட்டுவோம். அங்கு சாரதானந்தரும் அரிய வேலை செய்துகொண்டிருக்கிறார்.

சிங்கார : சுவாமிஜீ, சென்னை மடத்திற்கு ஒரு தக்க துறவியை அனுப்பி அங்கே சிறந்த பணி புரிய வேண்டும்.

விவே : இதோ, இராமகிருஷ்ணானந்தர்! பரம பக்தர் இராமகிருஷ்ணானந்தரே, தாங்கள் இன்றே புறப்பட்டுச் சென்று சென்னையில் குருதேவர் பணியைப் புரிந்து, மயிலாப்பூர் மடத்தைப் பலப்படுத்துங்கள்!

இராம : சுவாமிஜீயின் இஷ்டப்படி, குருதேவர் கருணையால் அவருடைய எளிய அன்பனாக, அப்பணிக்கு என் வாழ்வை நிவேதிக்கின்றேன்.

விவே : பிரம்மானந்தரே, யோகானந்தரே, நீங்கள் இங்கே தலைமை வகித்து, சங்கத்தின் காரியங்களை நிர்வகித்துத் துறவிகளையும் பழக்குங்கள்; அப்படியே பிறரும் நாடெங்கும் சென்று பணி புரியுங்கள்; எங்கும் சேவாசிரமங்களை நாட்டுங்கள்!

பிரம்மா : எல்லாம் வெற்றிபெறும்.

விவே : நான் சில மாதங்கள் இமயமலைப் பிரதேசங்களில், டார்ஜீலிங், மாயாவதி முதலிய இடங்களில், சாந்தமாக தியானம்செய்து கொண்டிருக்க விடையளியுங்கள். என் பேச்சுக்களை அரும்பாடுபட்டு எழுதி உலகிற்கீந்த குட்வினும், எனது பணி

யில் மிகவும் கருத்துக்கொண்ட ஐரோப்பிய சகோதர சகோதரிகளும் என்னுடன் வருவார்கள் !

அன்னை : மைந்தனே, நீ அரும் பாடுபட்டு உலகிற்கு ஞானவிழி யளித்தனை ; நீ தக்க ஓய்வெடுத்துக்கொள்ள வேண்டும். பரம சாந்தமான இடத்தில், தியானம் செய்துகொண்டு, சில மாதங்கள் இருத்தலே நலம். அல்மோரா அதற்கேற்ற இடமே.

விவே : உத்தரவு, தாயே !

எல்லாரும் : குருதேவரின் அருள்வடிவே, நின்னை என்னென்று துதிப்போம் ! [துதித்தல்]

இராகம் : தோடி] [ஆதி தாளம்

பல்லவி

வேதாந்த கேசரியே—விவேகானந்த (வே)

அநுபல்லவி

ஜோதி ஸ்வரூபா—குண
நிதா ஞானப்ர போதா (வே)

சரணம்

சுத்தா—பரிபூரண சித்தா—ராமக்ருஷ்ண
பக்தா—நித்திய ஜீவன் முக்தா—முனிவர்க் கரசே !
அத்வைத திபத்தை, ஆத்மப் ரகாசத்தை
எத்திசையிலும் ஏற்றி வைத்தாய் நீவாழ்க நீடு. (வே)

[எல்லோரும் பணிதல். குருதேவரின் ஒளி வடிவு தோன்றி விவேகானந்தரை ஆசீர்வதித்தல். பாரத தேவி தோன்றுதல்]

பாரத: என் செல்வப் புதல்வர்களா, இதோ நான் நீண்ட தவத்தினின்று எழுந்தேன்! பரஹம்ஸ-விவேகானந்தரே, உங்கள் வாக்கினின்றே எனது உள்ளம் பேசியது! உங்கள் அன்பும் அருளும் நீடு வாழ்க! பாரத மக்களே, பரமஹம்ஸ விவேகானந்தர் பேசியது என் பேச்சு; அவர்கள் செயல், என் செயல்! அவர்களைப் போற்றி அருட் பணியாற்றி, உலகெலாம் பாரத சக்தி நிலையமாக்கி, அகண்ட பாரத சக்தி மைந்தராக நிலவுமின்! திருவருட் செல்வர்களா, என் மைந்தரனைவரையும் உங்கள் வாயிலாக ஆசீர்வதிக்கின்றேன்! பாரத தர்மம் நீடு வாழ்க! பாரத சக்தி வெல்க! வேதாந்தச் சுடர் எங்கும் விளங்குக! ஆத்மவீரர் ஓங்குக! எல்லாரும் வாழ்க! ஓம் சாந்தம், சிவம்! மங்களம்! [பாரத தேவி ஆசீர்வதித்து மறைகிருள்.]

எல்லாரும்: தேவியே, நின் அருட்பணிக்கே பிறந்தோம்: அதற்கே உயிர்க்கின்ருேம்; நின்னிசை வாழ்க! ஓம் சக்தி!

[பரமஹம்ஸர் ஒளியுருத் தோன்றல்!]

பரம: என் அருமை நரேன், விவேகானந்தா, நீ வாழ்க! என் அருமைக் குழந்தைகாள், இனி அருவாயிருந்து பாரத ஞானத்தை, பாரத சக்திச் சுடரை உலகெங்கும் பரப்புகின்றேன்! சக்தியின் இச்சை அது! ஓம் சக்தி, ஓம் காளி! கண்ணே, விவேகானந்தா, வேதாந்த கர்ஜனை செய்; அருட் பணியைத் தூண்டி நடத்து!

[மறைதல்]

## 10. மங்களம்

[நாடக பாத்திரர்களனைவரும் மேடையில் வரிசையாக நின்று சக்திக்குத் தீபஹாரத்தி செய்து மங்களம் பாடுதல்.]

இராகம்: சுருட்டி] [சாப்பு தாளம்

ஸத்யமும் ஞானமும் தர்மமும் நீயே !
சக்தி ஓம், சக்தி ஓம், சக்தி ஓம் தாயே !
சுத்த வேதாந்தச் சுதந்தரச் சுடரே !
சுத்தோஹம், சுத்தோஹம் அத்வைதக் கடலே !
சித்தத்தில் தித்திக்கும் பேரின்பத் தேனே !
சிவோஹம், சிவோஹம், சின்மயக் கோனே !
வற்றாத சச்சிதா னந்தமெய் வாழ்வே !
மங்களம், மங்களம், எங்குமே சூழ்க !

ஓம் சுபம் !

விவேகானந்தம் முற்றிற்று

---

# அன்பு நிலய நூல்கள்

## யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார்

இயற்றியவை

| | ரூ. அ. |
|---|---|
| புதுக்கவி விட்மன் | 1 8 |
| மகாகவி ராஸீன் | 1 4 |
| வரகவி தாகூர் (200 பக்கங்கள்) | 1 8 |
| தாமரைக்குளம் முதலிய கதைகள் | 1 12 |
| அன்பின் அற்புதம் | 1 0 |
| வரகவி தாம்ஸன் | 0 8 |
| ஞானி எமர்ஸன் | 0 6 |
| மகாகவி தாந்தே (காவிய விமர்சனம்) | 1 8 |
| கல்விக் கதிர் (புதிய கல்வி முறை) ராப்பர் | 1 4 |
| ஷ காலிகோ | 1 12 |
| காலத்தேர் (காவிய நாடகம்) | 1 4 |
| ஸ்ரீராமதூதன் (கம்பன் கலை நாடகம்) | 1 4 |
| முல்லை மணம் (ஓரங்க இசை நாடகம்) | 0 4 |
| முன்னேற்றப் பாடல்கள் | 1 4 |
| கவிக் கனவுகள் (Poetic Dreams) | 0 12 |
| உடலுறுதி (Robust Health) | 1 10 |
| அன்னை | 0 4 |
| அரவிந்த யோக தீபிகை | 0 8 |
| சமய சாரம் | 0 4 |
| யோகசித்தி அல்லது பூரண வாழ்க்கை | 3 4 |
| அருட்சுடர் வள்ளலார் | 1 4 |
| இன்றைய மனிதனும், இனிவரும் மனிதனும் (2-ஆம் பதிப்பு) | 0 6 |
| நாடகக் கலை (ஆராய்ச்சி) | 0 6 |
| தியானமாலை | 1 0 |
| மகரிஷி தாயுமானார் | 0 4 |

கிடைக்குமிடம் :

**ANBU NILAYAM**

RAMACHANDRAPURAM (POST)

TIRUMAYAM (S. I. R.)

TRICHY (DIST.)

